التاميلي
٢١٤

الإصدار
السادس
والعشرون

# முஸ்லிமின் வழிகாட்டி

அஷ்ஷைக் அப்துல் கரீம் அத்தீவான்

# دليل المسلم

إعـداد

الشيخ عبد الكريم الديوان



The Cooperative Office For Call & Guidance to Communities at Rawdhah Area
Under the Supervision of Ministry of Islamic Affairs and Endowment
and Call and Guidance -Riyadh - Rawdhah
Tel. 2492727 - fax.2401175 E.mail: mrawdhah@hotmail.com P.O.Box 87299 Riyadh 11642

# முஸ்லிமின் வழிகாட்டி

மூலம் : அஷ்ஷைக் அப்துல் கரீம் அத்தீவான்
**தமிழில் : றம்ஸான் பாரிஸ்**
**(இஸ்லாமிய அழைப்பு மையம், ரவ்ழா.)**

மீளாய்வுசெய்தோர் :
மவ்லவி ஹபீப் அலியார்
இஸ்லாமிய அழைப்பு மையம், நஸீம்
மவ்லவி அப்துர் ரஹீம்
இஸ்லாமிய அழைப்பு மையம், மேற்கு ரியாத்

ح المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات بالروضة، ١٤٢٦هـ

فهرسة مكتبة الملك فهد الوطنية أثناء النشر

الديوان، عبدالكريم

دليل المسلم / عبدالكريم الديوان - الرياض، ١٤٢٦هـ

٦٨ ص؛ ١٢ × ١٧ سم

ردمك: ٠ - ٢ - ٩٥٣٩ - ٩٩٦٠

(النص باللغة التاميلية)

١- الإسلام - مبادئ عامة أ- العنوان

ديوي ٢١٠ ١٤٢٦/١٧٠٠

رقم الايـداع: ١٤٢٦/١٧٠٠

ردمك: ٠-٢-٩٥٣٩-٩٩٦٠

بسم الله الرحمن الرحيم

# முகவுரை

அஷ்ஷைக் அப்துல் கரீம் அத்தீவான் அவர்கள் அரபு மொழியில் எழுதியுள்ள - முஸ்லிமின் வழிகாட்டி - எனும் இந்நூல், உண்மையில் புதிதாக இஸ்லாத்தை தழுவியவர் கற்பதற்குப் பொருத்தமான ஒரு முக்கிய நூலாகும்.

இஸ்லாத்தின் தூண்களான ஐம்பெரும் கடமை களையும், வேறு சில அடிப்படை விடயங்களையும் இந்நூல் உள்ளடக்கியுள்ளது. பல மொழிகளிலும் மொழி பெயர்க்கப் பட்டுள்ள இந்நூலைத் தமிழ் தெரிந்த புதிய முஸ்லிம்களும் கற்றுப் பயனடைய வேண்டும் எனும் நோக்கில் இலகுவான தமிழில் மொழிபெயர்த்து வழங்கியுள்ளேன்.

இப்பணியை செய்து முடிக்க வாய்ப்பளித்த வல்ல நாயன் அல்லாஹ்வுக்கே அனைத்துப் புகழும், நன்றியும். மேலும், இந்நூலை, அதன் மூலத்துடன் மீளாய்வு செய்துதவிய அன்பு நன்பர் மவ்லவி ஏ. ஹபீப், மவ்லவி ஏ.பீ. அப்துர்ரஹீம் ஆகியோருக்கும், சிறந்த முறையில் இதனை வெளியிட உதவி புரிந்த சகோதரர் சைய்யித் முபாரக், சகோதரர் முஹம்மத் மஸாஹிம் ஆகியோருக்கும் எனது ஆழ்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழ் அறிந்தோர், இந்நூலை வாசித்துப் பயன் பெற வேண்டுமென ஆவல் கொண்டு இதை அச்சிட்டு இலவசமாக வெளியிடும் ரியாத் - ரவ்ழா இஸ்லாமிய அழைப்பு நிலையத்திற்கும் எனது மனமுவந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்புத்தகத்தின் நிறைகளுக்கு கூலியும், குறைகளுக்கு மன்னிப்பும் அல்லாஹ்விடம் வேண்டுகிறேன்.

மொழி பெயர்ப்பாளர்
றம்ஸான் பாரிஸ்

# அணிந்துரை

## அஷ்ஷைக் அப்துல்லாஹ் இப்னு அப்துர்ரஹ்மான் அல் ஜிப்ரீன் அவர்கள் வழங்கியது.

அனைத்து புகழும் அல்லாஹ் ஒருவனுக்கே. ஸலவாத்தும், ஸலாமும் முஹம்மத் நபி(ஸல்)அவர்கள் மீதும், அவர்களது குடும்பத்தவர்கள், தோழர்கள் மீதும் உண்டாவதாக!.

எமது சகோதரர் அஷ்ஷைக் அப்துல் கரீம் அவர்கள் எழுதிய இச்சிறிய நூலை வாசித்தேன். இஸ்லாமியக் கொள்கைகளிலும், சட்டங்களிலும் உள்ள மார்க்கக் கடமைகளை சிறப்பாக எழுதியுள்ளார். புதிதாக இஸ்லாத்தை தழுவியவரும், ஆரம்பக் கல்வியை பயில்பவரும் அவசியம் அறிய வேண்டியவற்றை மாத்திரம் குறிப்பிட்டுள்ளார். மேலும் கொடுக்கல் வாங்கல்களிலும், வணக்கவழிபாடுகளிலும் கருத்துவேற்றுமைக்குட்படாத விடயங்களையும், ஏற்றமானதாக தீர்மானிக்கப்பட்டவற்றையும் தெளிவான நடையில் வழங்கியுள்ளார்.

ஆகவே இச்சிறு நூலை மொழிபெயர்த்து பரவலாக வினியோகம் செய்யுமாறு நாம் சிபாரிசு செய்கிறோம். நரகத்தின் விளிம்பில் இருப்பவனுக்கு நேரான பாதை (இதன் மூலம்) பிரகாசிக்க வேண்டுமென ஆவல் கொள்கிறோம். ஏனெனில் நிச்சயமாக அறிவில்லாதவன், வழிதவறச்செய்து (மார்க்கத்தில் இல்லாத) நூதன காரியங்களிலும், மூட நம்பிக்கைகளிலும் ஆழ்த்திடும் தீயவனுக்கு இரையாகும் நிலையில் உள்ளவன். அல்லாஹ்வே நல்வழி காண்பிப்பவன். ஸலவாத்தும், ஸலாமும் முஹம்மத் நபி அவர்கள் மீதும், அவர்களது குடும்பத்தவர்கள், தோழர்கள் மீதும் உண்டாவதாக!

*அப்துல்லாஹ்இப்னுஅப்துர்ரஹ்மான்*
*அல் ஜிப்ரீன்.*

# முன்னுரை

அனைத்து புகழும் அல்லாஹ் ஒருவனுக்கே. ஸலவாத்தும், ஸலாமும் முஹம்மத் நபி (ஸல்) அவர்கள் மீது என்றும் நிலவட்டுமாக!

இச்சிறிய நூல் புதிதாக இஸ்லாத்தை தழுவியவருக்கும், அநேக இஸ்லாமிய சட்டங்கள் பற்றிய குறுகிய அறிவு கூட இல்லாதவருக்காகவும் தொகுக்கப்பட்டுள்ளது.

கொள்கைகளிலும், வணக்கவழிபாடுகளிலும், கொடுக்கல் வாங்கல்களிலும் இஸ்லாமிய மார்க்கத்தின் ஓரளவு சட்டங்களை இந்நூல் உள்ளடக்கியுள்ளது.

சட்டங்களோடு சம்பந்தப்பட்ட மார்க்கத்தின் அனைத்து விடயங்களுமின்றி பெரும்பாலும் அவற்றிலுள்ள அடிப் படையான அம்சங்கள், கடமைகள் என்பவற்றையே இந்நூல் கூறுகின்றது. சுன்னத்தான காரியங்கள், ஒழுக்க மாண்புகள் பற்றியெல்லாம் இந்நூல் பேசவில்லை. ஏனெனில், சுன்னத்தான காரியங்களைவிட கடமை களை அறிவதே முக்கியத்துவம் வாய்ந்ததாகவுள்ளது. இன்னும் புதிதாக இஸ்லாத்தை தழுவியவருக்கு மார்க்க விடயங்களில் மிக அவசியமானதை முதலிலும் பிறகு ஏனையவற்றையும் படிப்படியாகவே அறிமுகம் செய்ய வேண்டியுள்ளது.

ஆகவே, இந்நூலில் கூறப்பட்டுள்ள ஏதாவதொரு விடயம் பற்றி விரிவான அறிவை அவர் பெற விரும்பினால் அறிஞர்கள் எழுதியுள்ள பெரிய நூட்களை படித்தோ, அல்லது அதுபற்றி அந்த அறிஞர்களிடம் கேட்டோ தெரிந்துக் கொள்வது அவசியம்.

இப்பணியை அல்லாஹ்வின் திருமுகத்திற்காக செய்யப்பட்டதாக ஆக்கி, அருளும் நேர்வழியும் எமக்கு வழங்குமாறு நான் அல்லாஹ்விடம் பிரார்த்திக்கிறேன்.

**எழுதியவர்:**
**அப்துல் கரீம் அப்துல் மஜீத் அத்தீவான்.**

# முதலாவது :
## விசுவாசக் கொள்கை

அல்லாஹ்வையும் அவனது மலக்குகளையும், வேதங்களையும், தூதர்களையும், இறுதி நாளையும் இன்னும் விதியையும், அதன் நன்மை தீமையையும் நம்பிக்கை கொள்வது ஒவ்வொரு முஸ்லிமின் மீதும் கடமையாகும்.

## 1. அல்லாஹ்வை நம்புவது :

- அல்லாஹ்வின் இறைமைத்துவத்தை நாம் நம்பிக்கை கொள்ளவேண்டும். அதாவது அவன்தான் பரிபாலிப்பவன், படைப்பவன், ஆட்சிபுரிபவன், அனைத்து காரியங்களையும் நிர்வகிப்பவன் என்று நம்பவேண்டும்.

- படைப்பாற்றல் அல்லாஹ்விற்கு மட்டும் உள்ள பண்பாகும். அல்லாஹு த்தஆலா கூறுகிறான்: அல்லாஹ்வைத் தவிர படைப்பவன் உண்டா? அவன் வானத்திலிருந்தும், பூமியிலிருந்தும் உங்களுக்கு உணவளிக்கிறான். (35 : 3)

- ஆட்சி செய்தல் அல்லாஹ்விற்கு மட்டும் உள்ள பண்பாகும். படைப்பினத்தை ஆட்சி செய்பவன் அதை படைத்தவன் மட்டுமே என நாம் நம்பிக்கை கொள்ளவேண்டும். அல்லாஹு த்தஆலா கூறுகிறான்: வானங்கள் மற்றும் பூமியின் ஆட்சி அல்லாஹ்வுக்கே உரியது. ( 3 : 189)

- நிர்வாகம் செய்தல் அல்லாஹ்விற்கு மட்டுமே உள்ள பண்பாகும். அகிலத்தின் முழுமையான நிர்வாகத்திற்கு அல்லாஹ்வையன்றி வேறு எவரும் இல்லை என

நம்பிக்கை கொள்ளவேண்டும். அல்லாஹு த்தஆலா கூறுகிறான்: வானத்திலிருந்தும், பூமியிலிருந்தும் உங்களுக்கு உணவளிப்பவன் யார்? செவிப்புலனையும், பார்வைகளையும் தன் கைவசம் வைத்திருப்பவன் யார்? உயிரற்றதிலிருந்து உயிருள்ளதையும், உயிருள்ளதிலிருந்து உயிரற்றதையும் வெளிப்படுத்துபவன் யார்? காரியங்களை நிர்வகிப்பவன் யார்? என்று கேட்பீராக! அல்லாஹ் என்று கூறுவார்கள். அஞ்சமாட்டீர்களா? என்று நீர் கேட்பீராக! அவனே உங்களின் உண்மை இறைவனாகிய அல்லாஹ். உண்மைக்கு பின்னே வழிகேட்டைத் தவிர வேறு என்ன உள்ளது? எவ்வாறு திசை திருப்பப்படுகிறீர்கள்?

(10 : 31,32)

## • வணக்கத்திற்குரியவன் அல்லாஹ் மட்டுமே என நம்பிக்கை கொள்ளவேண்டும்.

அதாவது அல்லாஹு த்தஆலா மட்டுமே சத்திய இறைவனாவான், அவனையன்றி வணங்கப்படுபவை அனைத்தும் வீணானவை என்றும், வணக்கத்திற்கு தகுதியானவன் அவன் (அல்லாஹ்) ஒருவன் மட்டுமே என்றும் நம்பிக்கை கொள்ளவேண்டும். அல்லாஹ் கூறுகிறான் : அல்லாஹ்வே உண்மையானவன். அவனன்றி அவர்கள் அழைப்பவை வீணானவை.

(31 : 30)

துஆ கேட்டல், அபயம் தேடுதல், நேர்ச்சை செய்தல், அறுத்து பலியிடல் இன்னும் இதுபோன்ற வணக்கங்களில் ஏதாவதொன்றை எவரும் அல்லாஹ்வையன்றி வேறு எவருக்கேனும் செய்தால் அவர் இணைவைத்து விட்டவராவார். அதாவது அல்லாஹ்வுடன் பிறரை வணக்கத்தில் இணைத்துவிட்டார். இவ்வாறு வணக்கத்தில் இணைக்கப்பட்டவர், அவர் மலக்காக,

நபியாக, இறைநேசராக அல்லது வேறு யாராக இருந்தாலும் சரியே (அவர் இணைவைத்தவராவார்).

எவர் அல்லாஹ்விற்கு இணை வைப்பாரோ அவரை அல்லாஹ் ஒருபோதும் மன்னிக்கமாட்டான், அவர் செல்லுமிடம் நரகமாகும். (தனது இச்செயலை விட்டு விலகி மரணத்திற்கு முன்பு மன்னிப்புக் கேட்டுத் தன்னை காத்துக்கொள்ளாதவர்) அந்நரகத்தில் என்றும் நிலைத்திருப்பார். அல்லாஹு த்தஆலா கூறுகிறான் : நிச்சயமாக அல்லாஹ் அவனுக்கு இணை வைக்கப்படுவதை மன்னிக்கமாட்டான் அதைத்தவிர உள்ளதை தான் விரும்பியவருக்கு மன்னிப்பான். (4 :48)

அல்லாஹ்வும் அவனது தூதரும் அல்லாஹ்விற்கு உண்டு எனக்கூறிய திருநாமங்களையும், பண்புகளையும் அவற்றை படைக்கப்பட்ட எவருடைய பண்புகளுடனும் உவமைப் படுத்தாமலும், அல்லாஹ்வின் பண்புகளை இப்படி இப்படித்தான் என விபரம் கூறாமலும் நாம் நம்பிக்கைக் கொள்ளவேண்டும். அல்லாஹு த்தஆலா தன்னைப் பற்றி அல்குர்ஆனில் இவ்வாறு கூறுகின்றான் : அவனைப் போல் எதுவும் இல்லை. அவன் செவியுறுபவ னாகவும் பார்ப்பவனாகவும் இருக்கின்றான். (42 : 11)

அல்லாஹ்விற்கு உண்டு அல்லது இல்லை என்று விபரமாகவோ அல்லது சுருக்கமாகவோ கூறப்பட்ட அல்லாஹ்வின் அனைத்து பண்புகளுக்குமான ஆதாரம் அல்குர்ஆனும், நபி (ஸல்) அவர்களின் (வழிமுறை எனும்) சுன்னாவுமாகும். அல்குர்ஆன், சுன்னா கூறும் இத்தகைய பண்புகளை அதன் வெளிப்படையான

அர்த்தத்திலும், அல்லாஹ்விற்கு பொருத்தமான வகையில் அவை உண்மையானது என்றும் நம்புவதே இந்த சமூகத்தின் ஆரம்ப மக்களும், மற்றும் நேர்வழி நடந்த மார்க்க அறிஞர்களும் சென்ற பாதையாகும். அதாவது அப்பண்புகள் இப்படிப்பட்ட அமைப்பு என்றோ இதைப் போன்றது என்றோ கூறாமலும் இன்னும் அவற்றுக்கு மாற்று கருத்துக்கள் ஏதும் சொல்லாமலும் அவை அல்லாஹ்விற்கு கிடையாது என்று மறுக்காமலும் நம்பிக்கை கொள்வதாகும்.

மேலும் அல்லாஹ் அவனது வேதத்தில் தனக்கு இல்லை என மறுத்துக்கூறிய அல்லது அவனது தூதர் (ஸல்) அவர்கள் அல்லாஹ்விற்கு இல்லை என மறுத்துக்கூறிய பண்புகள், செயல்கள் அனைத்தையும் நாமும் அவை அல்லாஹ்விற்கு கிடையாது எனக் கூறவேண்டும். எதைப் பற்றி அல்லாஹ்வும் அவனது தூதரும் ஒன்றும் கூறவில்லையோ அதுபற்றி நாமும் மௌனம் சாதிக்கவேண்டும்.

மேலும் அல்லாஹு த்தஆலா வானத்திலே அவனது அர்ஷின்மீது உள்ளான். இந்நிலையில் தன் படைப்புக்களுடன் அவர்களின் நிலைமைகளை அறிபவனாகவும், பேச்சுக்களை செவியுறுபவனாகவும், செயல்களை பார்ப்பவனாகவும், இன்னும் அவர்களின் காரியங்களை நிர்வகிப்பவனாகவும் இருக்கின்றான் என நாம் நம்பவேண்டும். அல்லாஹ் அனைத்து காரியங்கள் மீதும் சக்தி பெற்றவனாக இருக்கின்றான்.

## 2. மலக்குகளை நம்புவது :

அல்லாஹ் படைத்த வானவர்கள் எனப்படும் மலக்குகளை நாம் நம்பிக்கை கொள்ளவேண்டும். அவர்கள் கண்களுக்கு தென்படாதவர்கள், அல்லாஹு த் தஆலா கூறுகிறான்: (அவர்கள்) சங்கைக்குரிய அடியார்கள். அவன் வார்த்தையை முந்தமாட்டார்கள் மேலும் அவன் கட்டளைப்படியே செயல்படுவார்கள்.
(21-26,27)

அவர்களை அல்லாஹ் ஒளியினால் படைத்துள்ளான். அல்லாஹ்வை வணங்கி வழிபடுவதில் அவர்கள் ஈடுபட்டுள்ளனர். பலதரப்பட்ட உலக விவகாரங்களின் பல வேலைகளை அவர்களுக்கு அல்லாஹ் பணித்துள்ளான். அடியார்களை காப்போர், அவர்களின் செயல்களை பதிவு செய்வோர் இன்னும் அவர்களின் உயிரை கைப்பற்றுவோர் எனப் பலர் அவர்களில் உள்ளனர், இது தவிர வேறு பல வேலைகளும் அவர்களுக்கு உண்டு.

மேலும் அல்லாஹ் அவர்களை எமக்கு மறைவாக வைத்துள்ளான். ஆகவே நாம் அவர்களை பார்க்கமுடியாது. சிலவேளை தனது அடியார்களில் சிலருக்கு அவர்களை அல்லாஹ் பார்க்கச் செய்வான். மேலும் அவர்களுக்கு (வேகமாகச் செல்வதில், பலத்தில், உருவமெடுப்பதில்) உன்னத சக்திகளை அல்லாஹ் வழங்கியுள்ளான். அவர்களுக்கு சலிப்பு கிடையாது, அவர்களின் எண்ணிக்கைக்கு அளவு கிடையாது.

அவர்களில் சிலரின் பெயர்களையும், அவர்களின் பணிகளையும் அல்லாஹ் எமக்கு குறிப்பிட்டுள்ளான்.

**ஜிப்ரீல்** : அல்லாஹ்வின் செய்தியை அவனது தூதர்களுக்கு கொண்டுசெல்வது இவரின் பொறுப்பாகும். அல்லாஹுத்தஆலா கூறுகிறான் : யாரேனும் ஜிப்ரீலுக்கு எதிரியாக இருந்தால் (அது தவறாகும்) ஏனெனில் அவரே அல்லாஹ்வின் விருப்பப்படி இதை (முஹம்மதே) உமது உள்ளத்தில் இறக்கினார். (2: 97)

**மாலிக்** : இவர் நரகத்தின் பாதுகாவலர். (நரகக் காவலரான) மாலிக்கே! உமது இறைவன் எங்கள் கதையை முடிக்கட்டும் எனக் கேட்பார்கள். நீங்கள் (இந்நரகத்திலேயே மரணிக்காது) இருப்பீர்கள் என்று அவர் கூறுவார். (43: 77)

**முன்கர், நகீர்:** இவர்கள் கப்ரில் அடியார்களை விசாரணை செய்பவர்கள்.

## 3. வேதங்களை நம்புவது :

அல்லாஹுத்தஆலா அவனது தூதர்கள்மீது இறக்கிய அனைத்து வேதங்களையும் நாம் நம்பிக்கை கொள்ளவேண்டும். நபி முஹம்மத் (ஸல்) அவர்கள் மீது இறக்கிய அல்குர்ஆன் அனைத்து வேதங்களையும் விட சிறந்ததாகும், முந்திய இறை வேதங்களை அது மாற்றிவிட்டது. இதுபற்றி அல்லாஹுத்தஆலா பின்வருமாறு கூறுகிறான் : தனக்கு முன் சென்ற வேதத்தை உண்மைப்படுத்துவதாகவும் அதைப் பாதுகாப்பதாகவும் இந்த குர்ஆன் இருக்கிறது. (5: 48)

அல்குர்ஆனுக்கு முந்திய வேதங்கள் மனித கரங்களின் மாற்றத்திற்கு இலக்கானது, ஆகவே முந்திய வேதங்களையன்றி அல்குர்ஆனை மாத்திரமே பின்பற்றுவது அவசியமாகும். வீணர்களின் விளையாட்டிலிருந்தும்,

வழிதவறியோரின் வழிகேட்டிலிருந்தும் இந்தக் குர்ஆனை அல்லாஹ் அவனே காப்பதாக பொறுப்பேற்றுள்ளான். தனது இப்பாதுகாப்பு பற்றி அவன் கூறுகையில் : இக்குர்ஆனை நாமே இறக்கினோம் நாமே இதனை காப்போம் (என்கின்றான்). (15: 9)

அல்குர்ஆனில் எதையேனும் எவரும் மறுத்தால், அல்லது அதில் கூட்டல், குறைவு, மாற்றம் ஏதும் இடம்பெற்றுள்ளதாக வாதிட்டால் அவர் நிராகரிப்பாளர் (கா∴பிர்) ஆவார். அல்குர்ஆன் (அதன் எழுத்துக்கள், கருத்துக்கள் இரண்டுமே) அல்லாஹ்வின் பேச்சாகும். அது அல்லாஹ்விடமிருந்து இறக்கப்பட்ட ஒன்றேயன்றி படைக்கப்பட்டதல்ல.

## 4. நபிமார்களை நம்புவது :

நபிமார்களை அல்லாஹ் அவனது படைப்புகளிடம் அனுப்பிவைத்தான். அல்லாஹ் கூறுகின்றான்: தூதர்களை அனுப்பிய பின்னர் அல்லாஹ்வைக் குறைக்கூற மனிதர் களுக்கு எந்த ஆதாரமும் இருக்கக்கூடாது என்பதற்காக நற்செய்தி கூறி, எச்சரிக்கும் தூதர்களை (அவன் அனுப்பினான்) அல்லாஹ் மிகைத்தவனாகவும், ஞானமிக்கவனாகவும் இருக்கிறான். (4: 165)

இறைத் தூதர்களில் முதலில் வந்தவர் நூஹ் (அலை) அவர்களாவார். இறுதியானவர் முஹம்மத் (ஸல்) அவர்களாவார். அல்லாஹு த்தஆலா கூறுகிறான் : நூஹு க்கும், அவருக்கு பின் வந்த நபிமார்களுக்கும் தூதுச் செய்தி அறிவித்தது போல் (முஹம்மதே!) உமக்கும் நாம் தூதுச் செய்தி அறிவித்தோம். (4: 163)

மேலும் கூறுகிறான் : முஹம்மத் உங்களில் ஆண்களில் எவருக்கும் தந்தையாக இருக்கவில்லை. மாறாக

அல்லாஹ்வின் தூதராகவும், நபிமார்களில் முத்திரையாகவும் இருக்கிறார். அல்லாஹ் ஒவ்வொரு பொருளையும் அறிந்தவனாக இருக்கின்றான். (33: 40)

முஹம்மத் நபி (ஸல்) அவர்களுக்கு பிறகு எவர் தானும் ஒரு நபி என வாதிடுகிறாரோ, அல்லது வாதிடுபவரை உண்மையாளர் எனக் கூறுகிறாரோ அவர் நிராகரிப்பாளர் (கா∴பிர்) ஆவார். ஏனெனில் அல்லாஹ்வையும் அவன் தூதரையும் மேலும் முஸ்லிம்களின் ஏகோபித்த தீர்மானத்தையும் அவர் பொய்யாக்கிவிட்டார்.

அனைத்து நபிமார்களும் ஏனைய மனிதர்களை விட சிறந்தவர்களாவார்கள். இக்கருத்திற்கு முரண்படுபவர் நிராகரிப்பவராவார். இறைத்தூதுவர்கள் எல்லோரும் மனிதர்களே. அல்லாஹ்வின் இறைமைத்துவத்தின் தன்மைகள் எதுவும் அவர்களுக்கு இல்லை என நாம் நம்பிக்கை கொள்ளவேண்டும். தனது நபியவர்களுக்கு அல்லாஹு த்தஆலா இவ்வாறு கூறுமாறு கட்டளையிடுகிறான்: அல்லாஹ் நாடினால் தவிர எனக்கே நன்மை செய்யவோ, அல்லது தீமை செய்யவோ நான் அதிகாரம் பெற்றிருக்கவில்லை எனக் கூறுவீராக!. (7:188) மேலும் கூறுமாறு கட்டளையிடுகிறான் : அல்லாஹ்விடமிருந்து என்னை எவரும் காப்பாற்ற மாட்டார். அவனன்றி ஒதுங்குமிடத்தையும் (எவரிடமும்) நான் அடையப்போவதில்லை எனக் கூறுவீராக!. (72:22)

முஹம்மத் (ஸல்) அவர்களின் நபித்துவத்துடன் அல்லாஹு த்தஆலா தூதர்களை அனுப்புவதை நிறுத்திவிட்டதோடு முழு மனித சமுதாயத்திற்கும் அன்னாரை தூதராக அனுப்பியுள்ளான் எனவும் நாம் நம்பிக்கை

கொள்ளவேண்டும். அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான்: மனிதர்களே! நான் உங்கள் அனைவருக்கும் அல்லாஹ்வின் தூதராக இருக்கின்றேன் (7 : 158)

தனது மார்க்கத்தைத் (இஸ்லாத்தைத்) தவிர வேறு எந்த மார்க்கத்தையும் எவரிடமிருந்தும் அல்லாஹ் ஏற்கமாட்டான். அல்லாஹ் கூறுகிறான்: இஸ்லாம் அல்லாத மார்க்கத்தை யாரேனும் விரும்பினால் அவரிடமிருந்து அது ஏற்கப்படமாட்டாது. அவர் மறுமையில் நஷ்டமடைந்தவராக இருப்பார். (3 : 85) ஆகவே இஸ்லாத்தைத் தவிர வேறு மார்க்கத்தை தழுவிய அனைவரும் நிராகரிப்பாளர்களாவர். நபி முஹம்மத் (ஸல்) அவர்களுக்கு அல்லாஹ்வின் பாதுகாப்பு உறுதியானது.

## 5. இறுதி நாளை நம்புவது :

இவ்வுலகத்திற்கு ஒரு முடிவு நேரம் உண்டு. அந்நேரத் தில் அது முடிவடையும். அல்லாஹ் கூறுகிறான்: இதில் (உலகத்தில்) உள்ள அனைவரும் அழிபவர்கள் மகத்துவமும் கண்ணியமும் மிக்க உமது இறைவனின் முகமே மிஞ்சும். (55 :26,27)

மறுமையின் முதல் வீடான கப்ரின் சோதனையை, அதாவது அதில் அடியான் அவனது இறைவன், மார்க்கம், நபி ஆகியோர் பற்றி விசாரிக்கப்படுவான் என நாம் நம்பிக்கை கொள்ளவேண்டும். அவ்வாறே கப்ரில் விசுவாசிகளுக்கு இன்பமும், நிராகரிப்பாளர்களுக்கு துன்பமும் உண்டு எனவும் நம்பிக்கை கொள்ள வேண்டும்.

மேலும் இறுதி நாளான மறுமை நாளில் அல்லாஹு த்தஆலா மனிதர்களை அவர்களின்

கப்ருகளிலிருந்து உயிருடன் எழுப்பி, அவர்களின் செயல்கள் பற்றி விசாரித்து கூலி வழங்குவான். நல்லவர்கள் நிரந்தர இன்பத்தை சுவனத்தில் அடைவர். தீயவர்கள் இழிவுதரும் வேதனையை நரகில் சுகிப்பர் எனவும் நாம் நம்பிக்கை கொள்ள வேண்டும். அல்லாஹு த்தஆலா கூறுகிறான்: ஸூர் ஊதப்படும், அல்லாஹ் நாடியோரைத் தவிர வானங்களிலும் பூமியிலும் இருப்போர் மூர்ச்சையாவார்கள். பின்னர் மீண்டும் ஒருமுறை அது ஊதப்படும் உடனே அவர்கள் எழுந்து பார்ப்பார்கள். (39 : 68)

இந்த மறுமை நாளுக்கு முன்பு சில அடையாளங்கள் இடம்பெறும், அவை மறுமை நடைபெறுவதற்கான முன் அடையாளங்களாகவும், அறிகுறிகளாகவும் இருக்கின்றன. இந்நாளைப் பற்றியும் அதில் நடக்கவிருக்கின்ற பயங்கரங்கள் பற்றியும் அல்குர்ஆனிலும், சுன்னாவிலும் வந்துள்ள அனைத்து செய்திகளையும் நாம் நம்பிக்கை கொள்ளல் வேண்டும்.

## 6 விதியை நம்புவது : **விதியின் நன்மை, தீமையை நம்புதல்.** அதாவது அல்லாஹு த்தஆலா அவனின் முன்னறிவு, நாட்டத் திற்கேற்ப அனைத்து படைப்புகளையும் அமைத் துள்ளான் என நம்புவதாகும்.

விதி பற்றிய நம்பிக்கை பின்வரும் விதத்தில் அமைந்தி ருத்தல் வேண்டும்: அதாவது

- நடைபெறும் விடயங்களை அவை நடைபெறுவதற்கு முன்பே அல்லாஹ் அறிவான்.
- மேலும் பாதுகாப்பான பலகையில் அவற்றை அவன் தன்னிடம் எழுதிவைத்துவிட்டான்.

• இன்னும் அல்லாஹ் நாடியவைதான் நடைபெற்று உள்ளது, நாடாதவை நடைபெறவில்லை. ஆகவே அவன் நாடுவதைத் தவிர வேறு எதுவும் நடைபெறாது, அல்லாஹ் யாவற்றின் மீதும் ஆற்றல் உள்ளவன்.

• மேலும் அல்லாஹ்வே அனைத்தையும் படைத்தவன், அவன் பரிசுத்தமானவன், தான் நாடியதைச் செய்யும் ஆற்றல் உள்ளவன் என்றும் நம்பவேண்டும்.

## இஸ்லாமிய கொள்கை சம்பந்தமான இன்னும் சில காரியங்கள் :

• மறைவானவற்றை அல்லாஹ்வைத் தவிர வேறு எவரும் அறியமாட்டார் என நாம் நம்பிக்கை கொள்ளவேண்டும்.

• குறிகாரர்கள் கூறுவதை உண்மை என நம்புபவர் நிராகரிப்பாளர் ஆவார். மேலும் அவர்களிடம் செல்வது பெரும் பாவங்களில் ஒன்றாகும்.

• பரக்கத் என்பது மார்க்கம் வரையறுத்த விடயங்களில் மட்டுமே இருக்கின்றது. ஆகவே ஆதாரமின்றி எந்த ஒன்றைக் கொண்டும் பரக்கத் அடையத் தேடுவது கூடாது.

• **வஸீலா (பரிந்துரை)** : அல்குர்ஆனின் மூலம் கட்டளையிடப்பட்டுள்ள வஸீலா (பரிந்துரை) என்பது மார்க்கம் அனுமதித்த அனைத்து நன்மையான காரியங்கள் மூலமாக அல்லாஹ்விடம் நெருக்கத்தை ஏற்படுத்துவதைக் குறிக்கும். அல்லாஹ்வின் திருநாமங்களைக் கொண்டும், அவனின் பண்புகளைக் கொண்டும் வஸீலா தேடுவது மார்க்கம் அனுமதித்த முறையாகும். (யா ஹய்யு யா கய்யூம் பிக அஸ்தகீஸ்)

என்றும் நிலைத்து உயிருடன் இருப்பவனே! உன்னிடமே உதவி கோருகிறேன் என்று பிரார்த்திப்பதை இதற்கு உதாரணமாகக் கூறலாம். வஸீலாவின் மற்றொரு முறைதான் செய்த நல்ல காரியங்களில் ஒன்றை குறிப்பிட்டு அல்லாஹ்விடம் பிரார்த்திப்பதாகும். உதாரணமாக யா அல்லாஹ்! என் பெற்றோருக்கு நான் புரியும் உபகாரத்தின் பொருட்டினால், அல்லது என் குடும்பத்தாருடன் நான் சேர்ந்து நடப்பதன் பொருட்டினால் நீ என்னை மன்னிக்குமாறும், எனக்கு அருள்பாலிக்குமாறும், மேலும் எனக்கு உணவு வழங்குமாறும் கேட்கிறேன் எனக் கூறுவது போன்றதாகும்.

வஸீலாவின் இன்னொரு முறைதான் உயிர் வாழும் ஒரு நல்ல மனிதரின் துஆவின் மூலம் வஸீலா தேடுவதாகும். அதாவது உயிருடன் இருக்கும் நல்ல மனிதர்களிடம் தனக்காக பிரார்த்திக்குமாறு கேட்பதாகும்.

## பித்அத்தான வஸீலா முறை :

மார்க்கத்தில் கூறப்படாத முறையில் அல்லாஹ்விடம் வஸீலா தேடுவது பித்அத்தான வஸீலா முறையாகும். அது நபிமார்கள், நல்லவர்களின் பொருட்டால் அல்லது அவர்களின் அந்தஸ்தின் பொருட்டால், மகிமையின் பொருட்டால் என்றும் இன்னும் இதுபோன்ற வார்த்தைகளைக் கூறி வஸீலா (பரிந்துரை) வேண்டுவது போன்றதாகும். உதாரணமாக முஹம்மத் நபி (ஸல்) அவர்களின் அந்தஸ்தின் பொருட்டால் அல்லது உனது நேசர் இன்னாரின் மகிமையைக் கொண்டு எனது பாவத்தை மன்னிக்குமாறும், எனக்கு அருள் புரியுமாறும், என்

கஷ்டத்தை நீக்குமாறும் உன்னிடம் கேட்கிறேன் எனக் கூறுவது போன்றதாகும்.

## வஸீலாவில் இறைவனுக்கு இணை :

மரணித்தவர்களை தனக்கும் அல்லாஹ்விற்கு மிடையில் வணக்கத்தில் இடைத்தரகர்களாக ஆக்குவது இன்னும் அவர்களிடம் பிரார்த்திப்பது, தேவைகளைக் கேட்பது, உதவி தேடுவது இன்னும் இதுபோன்ற காரியங்களைச் செய்வது அல்லாஹ்விற்கு இணை வைக்கும் வஸீலா முறையாகும்.

அல்குர்ஆனில் அல்லது சுன்னாவில் இவர் சுவனவாசி அல்லது நரகவாசி என்று குறிப்பிடப்படாத எந்த ஒரு முஸ்லிமையும் குறித்து இவர் சுவனவாசி அல்லது நரகவாசி என உறுதியிட்டுக் கூறக்கூடாது.

நிராகரித்தல், இணை வைத்தல் ஆகியவற்றை தவிர்ந்த ஏனைய பெரும்பாவங்களில் எதுவும் அடியானை இஸ்லாத்திலிருந்து வெளியேற்றாது. ஆயினும் அப்பாவங்களை செய்பவர் உலகில் குறையுள்ள ஈமான்தாரியாகவும், மறுமையில் அல்லாஹ்வின் நாட்டத்திற்குட்பட்டவராகவும் இருப்பார், அல்லாஹ் விரும்பினால் அவரை மன்னிப்பான் இல்லாவிட்டால் தண்டிப்பான்.

பெருமானார் (ஸல்) அவர்களின் தோழர்கள் எல்லோருமே நேர்மையாளர்கள். நபியவர்களுக்கு பின்பு இந்த உம்மத்தவர்களில் அவர்கள்தாம் மிகச் சிறந்தவர்கள். அவர்களை நேசிப்பது மார்க்கக் காரியமாகவும், ஈமானைச் சார்ந்ததாகவும் உள்ளது. அவர்களின் அந்தஸ்திற்கு ஏற்ற நல்ல வார்த்தைகளின் மூலமே அவர்களைப் பற்றி நாம் பேசவேண்டும்.

நபித்தோழர்களில் மிகச் சிறந்தவர் அபூ பக்கர் (ரழி) அவர்களாவார், பிறகு உமர் (ரழி) அவர்களாவார், பிறகு உஸ்மான் (ரழி) அவர்களாவார், பிறகு அலி (ரழி) அவர்களாவார்.

பெருமானார் (ஸல்) அவர்களின் குடும்பத்தவர்களான அன்னாரின் மனைவிமார்கள் மற்றும் விசுவாசம் கொண்ட உறவினர்களான அன்னாரின் சிறிய தந்தைமார்கள் அவர்களின் பிள்ளைகள் ஆகியோர்களை நேசிப்பதும் மார்க்க விடயங்களில் ஒன்றாகும்.

நபி (ஸல்) அவர்கள் கொண்டுவந்த மார்க்கத்தில் ஏதேனுமொன்றை எவரும் பரிகாசம் செய்தால், அல்லது அல்லாஹ்வையும் அவன் தூதரையும் ஏசிப்பேசினால் அவர் காஃபிராகிவிடுவார். சூனியம் செய்தல், அதன் பிரகாரம் செயல்புரிதல் அதனை பயன்படுத்துதல் ஆகிய அனைத்தும் (குஃப்ரு எனும்) நிராகரிப்பாகும்.

## இரண்டாவது : வணக்கங்கள்

### 1. சுத்தம் (அத்தஹாரா).

சுத்தம் இரு வகைப்படும்.

**அ.** அசுத்தங்களிலிருந்து சுத்தமாதல். அதாவது தொழுபவரின் உடல், தொழுமிடம், அவர் அணிந்திருக்கும் ஆடை ஆகிய அனைத்தும் மலம், சலம், இரத்தம் போன்ற அசுத்தங்களை விட்டும் சுத்தமாயிருத்தல் அவசியம்.

**ஆ.** தொடக்கிலிருந்து சுத்தமாதல்.
தொடக்கு இரு வகைப்படும்.

முதலாவது : சிறுதொடக்கு. இது வுழூவை முறிக்கக்கூடிய காரியங்களான மலசலம், காற்று வெளிப்படுதல் போன்றவற்றைக் குறிக்கும் .

இரண்டாவது : பெருந்தொடக்கு. இது குளிப்பை கடமையாக்கும் காரியங்களான விந்து வெளியாவது, மாதவிடாய், மற்றும் பிரசவ உதிரம் போன்றவற்றைக் குறிக்கும்.

- **வுழூ** என்பது : (மலசலம் கழித்தல், காற்று வெளிப்படல், ஆழ்ந்த உறக்கம் மற்றும் ஒட்டக இறைச்சி சாப்பிடல் போன்ற) சிறு தொடக்கை விட்டும் நீங்குவதற்கான கடமையான சுத்தமாகும் .

## வுழூ செய்யும் முறை :

1. வுழு செய்வதாக மனதில் நினைக்கவேண்டும். வாயால் கூறக்கூடாது.
2. பிஸ்மில்லாஹ் என்று கூறி தனது இரு கைகளையும் மூன்று முறை (மணிக்கட்டு வரை) கழுவவேண்டும்.
3. பிறகு மூன்று முறை வாயை கொப்பளித்து மூக்குத்துவாரங்களையும் சுத்தம்செய்யவேண்டும்.
4. பிறகு மூன்று முறை முகத்தை கழுவவேண்டும் முகத்தின் எல்லைகள் பின்வருமாறு :

அகலத்தில் ஒரு காதிலிருந்து மறு காதுவரை,
நீளத்தில், தலைமுடி முளைக்கும் ஆரம்ப இடத்திலிருந்து நாடிவரை.

5. பிறகு இரு கைகளையும் மூன்று முறை (விரல் நுனியிலிருந்து முழங்கை மொழி உட்பட) கழுவ வேண்டும். வலது கையை முதலிலும் பிறகு இடது கையையும் கழுவவேண்டும்.

6. பிறகு தலையை தண்ணீரால் ஒரு முறை தடவ வேண்டும், கையை நனைத்து முன்தலையிலிருந்து பிடரி வரை தடவி பிறகு மீண்டும் முன்தலை வரை தடவுதல் வேண்டும்.

7. பிறகு இரு காதுகளையும் ஒரு முறை (தலைக்காக நனைத்த அதே கை) நீரால் தடவ வேண்டும்.

8. பிறகு இரு கால்களையும் விரல் நுனியிலிருந்து கரண்டைக் கால் வரை கழுவவேண்டும். வலது காலில் ஆரம்பித்து பிறகு இடது காலை கழுவவேண்டும்.

## குளிப்பு :

விந்து வெளியேறுதல், மாதவிடாய், பிரசவத் தீட்டு ஆகிய பெருந் தொடக்குகளிலிருந்து சுத்தமாவதற்காக குளிப்பது கடமையான குளிப்பாகும்.

## குளிக்கும் முறை :

1. மனதில் குளிப்பதை நிய்யத் செய்யவேண்டும், வாயினால் மொழியக்கூடாது.

2. பிறகு பிஸ்மில்லாஹ் எனக்கூறி முழுமையாக வுழூ செய்யவேண்டும்.

3. பிறகு தலையை நனைக்கும் அளவு மூன்று முறை அதன்மீது தண்ணீர் ஊற்றவேண்டும்.

4. பிறகு உடலின் ஏனைய பகுதிகளை கழுவ வேண்டும்.

## தயம்மும் செய்தல் :

தயம்மும் என்பது தண்ணீர் கிடைக்காதவர் அல்லது அதை உபயோகிப்பதால் பாதிப்படைபவர் வுழூ, மற்றும் கடமையான குளிப்புக்கு பதிலாக மண்ணைக் கொண்டு செய்யும் கடமையான சுத்தமாகும்.

## தயம்மும் செய்யும் முறை :

சுத்தம் செய்வதை மனதில் (வுழூ செய்வதற்கு, குளிப்பதற்கு என்று) நாடிக்கொள்ள வேண்டும், பிறகு இரு கைகளையும் பூமியிலோ அல்லது பூமியுடன் இணைந்துள்ள சுவரிலோ அல்லது அதுபோன்ற பகுதிகளிலோ ஒரு முறை அடித்து, முகத்தை தனது உள்ளங்கைகளால் தடவவேண்டும், பிறகு இரு கைகளின் வெளிப்பகுதிகளை ஒன்றை மற்றொன்றால் (மணிக்கட்டு வரை) தடவிக்கொள்ள வேண்டும்.

## மாதவிடாய் (ஹய்ழ்)

இது, ஒரு பெண் பருவ வயதை அடைந்ததும் மாதந்தோறும் குறிப்பிட்ட காலங்களில் வழக்கமாக அவளின் கருப்பையிலிருந்து வெளிவரும் இரத்தத்தை குறிக்கும்.

## பிரசவ தீட்டு. (நிபாஸ்)

இது, பிரசவத்திற்கு பிறகு பெண்ணின் மர்மஸ்தானத்திலிருந்து வெளியாகும் இரத்தத்தை குறிக்கும்.

## மாதவிடாய், பிரசவத் தீட்டு ஏற்பட்ட காலத்தில் தடையான காரியங்கள் :

- **உடலுறவு கொள்ளல்** : மாதவிடாய், பிரசவ தீட்டு ஆகிய நிலைகளில் இருக்கும் மனைவியுடன் உறவு கொள்வது ஆடவருக்கு தடையாகும்.

- **தொழுகை, நோன்பு, தவாஃப் ஆகியன செய்தல்,** ஆயினும் விடுபட்ட நோன்பை சுத்தமான பின்பு நோற்கவேண்டும், தொழுகையை நிறைவேற்ற வேண்டியதில்லை.

- **அல்குர்ஆனை தொடுதல், அல்லது அதை ஓதுதல்.**

- **பள்ளிவாயிலில் தங்குதல்.** மாதவிடாய் உள்ள பெண் பள்ளிவாயிலில் தங்குதல் கூடாது.
- **விவாகரத்து செய்தல்.** மாதவிடாய், பிரசவ இரத்தம் வெளிவரும் காலத்தில் மனைவியை ஆடவர் விவாகரத்து (தலாக்) செய்வது கூடாது.

# 2. தொழுகை :

அல்லாஹ்வையும் அவன் தூதரையும் நம்பி, சாட்சி அளித்த பிறகு, இஸ்லாமிய மார்க்கத்தில் உள்ள மிகப் பெரிய கடமை தொழுகையாகும். அதுவே மார்க்கத்தின் இரண்டாவது கடமை. எவர் முழுமையாக தொழுகையை விட்டுவிடுகிறாரோ அவர் காஃபிராவார். மேலும் தொழுகையை நிறைவேற்றும் முஸ்லிம் அதன் கடமைகள், நிபந்தனைகள் எல்லாவற்றையும் பேணியவராகவும், அத்தொழுகையை முறிக்கக் கூடிய காரியங்களை தவிர்ந்தவராகவும் நிறைவேற்றினால் மட்டுமே அவரிடமிருந்து அது ஏற்றுக் கொள்ளப்படும். ஆகவே ஒருவரின் தொழுகை இவ்வாறு அமையவேண்டுமாயின் அவர் நபி (ஸல்) அவர்கள் தொழுதது போன்று தொழுகையை நிறைவேற்ற வேண்டும்.

## தொழுகையின் நிபந்தனைகள் :

இவை தொழுகையை நிறைவேற்றுவதற்காக முன்பே ஏற்பாடு செய்யவேண்டிய காரியங்கள். மார்க்க அனுமதியின்றி இவற்றில் ஏதேனும் ஒன்றை செய்யாது விட்டால் தொழுகை நிறைவேறாது.

1. மலசலம், காற்று போன்ற சிறுதொடக்கு ஏற்பட்டவர் வுழு செய்தல்.

2. விந்து வெளிப்படுதல், மாதவிடாய், பிரசவதீட்டு போன்ற பெருந்தொடக்கு ஏற்பட்டவர் குளித்தல்

3. தொழுகையின் நேரம் வரவேண்டும். நேரம் வருவதற்கு முன்பு தொழுதால் தொழுகை நிறைவேறாது. உதாரணமாக லுஹர் தொழுகையை அதற்குரிய நேரம் வருவதற்கு முன்பு தொழ முடியாது.

4. கிப்லா (மக்கா) வை முன் நோக்க வேண்டும். கிப்லா இருக்கும் திசையை முன் நோக்காது தொழுதால் தொழுகை நிறைவேறாது.

5. அவ்ரத்தை (அவசியம் மறைக்கவேண்டிய உடல் பகுதியை) மறைக்க வேண்டும். ஆகவே அவற்றில் ஏதேனும் வெளியில் தென்படும் நிலையில் தொழுதால் தொழுகை நிறைவேறாது. ஆண், முட்டுக்காலில் இருந்து தொப்புள் வரை. பெண், முகம், மணிக்கட்டு வரையிலுள்ள இரு கைகள் தவிர்ந்த ஏனைய அனைத்து பகுதிகளையும் அவசியம் (தொழும்போது) மறைக்க வேண்டும்.

6. நிய்யத்து வைத்தல், நிய்யத் என்பது தான் செய்ய முனைந்துள்ள காரியத்தை மனதில் நினைப்பதாகும்.

## தொழுகையை நிறைவேற்றும் முறை :

- தொழுபவர் எங்கிருந்தாலும் கிப்லா திசையை முன்னோக்கவேண்டும், அவர் நிறைவேற்றப்போகும் தொழுகையை (லுஹர் அல்லது அஸர் என்று) மனதால் நாடியவராக நின்ற நிலையில் தொழுகையை நிறைவேற்றவேண்டும். நிற்க சக்தி இருப்பின் நின்று

தொழுவது தொழுகையின் (ருகுன் எனப்படும்) முதல் நிலைக் கடமைகளில் ஒன்றாகும்.

- அல்லாஹு அக்பர் என்று தக்பீர் கூறவேண்டும். தக்பீரதுல் இஹ்ராம் எனப்படும் இந்த தக்பீர் தொழுகையின் முதல் நிலைக் கடமைகளில் ஒன்றாகும். தொழுகையில் கூறப்படும் ஏனைய அனைத்து தக்பீர்களும் (வாஜிப் எனப்படும்) இரண்டாம் நிலைக் கடமைகளாகும்.

- பின்பு தனது வலக்கரத்தை இடக்கரத்தின்மீது வைத்தவராக இரு கரங்களையும் நெஞ்சின்மீது வைக்கவேண்டும்.

- சூரா ஃபாத்திஹாவையும், பிறகு தனக்கு இலகுவான அல்குர்ஆனின் வேறு சில வசனங்களையும் ஓதவேண்டும். சூரா ஃபாத்திஹா ஓதுவது முதல் நிலைக் கடமையாகும்.

- தக்பீர் கூறி குனிய(ருகூஃ செய்ய)வேண்டும். இந்நிலையில் முதுகுக்கு நேராக தன் தலையை வைத்து இரு கைகளையும் முட்டுக்கால் மீது வைக்கவேண்டும், மேலும் அந்த ருகூஃவில் தாமதித்து சுப்ஹான ரப்பியல் அழீம் என்று கூறவேண்டும். இதனை மூன்று முறை கூறுவது சிறப்பாகும். ருகூஃ செய்வது முதல் நிலைக் கடமையாகும். அதில் சுப்ஹான ரப்பியல் அழீம் எனக் கூறுவது இரண்டாம் நிலைக் கடமையாகும்.

- ருகூஃவிலிருந்து தன் தலையை உயர்த்தி நேராக நிற்கவேண்டும். இந்நிலையில் தனது தோள் புஜங்களுக்கு நேராக இரு கைகளையும் உயர்த்தி இமாமாகவோ அல்லது தனிமையிலோ தொழுபவர்

சமிஅல்லாஹு லிமன் ஹமிதா என்று கூறவேண்டும். (இமாமை பின்பற்றி தொழுபவர் சமிஅல்லாஹு லிமன் ஹமிதா என்று கூறாமல் இமாம் அதை கூறியதும் எழுந்து நின்று) பின்பு (எல்லோரும்) ரப்பனா லகல்ஹம்து எனக் கூறவேண்டும். சமிஅல்லாஹு லிமன் ஹமிதா, ரப்பனா வலகல்ஹம்து எனக் கூறுவது இரண்டாம் நிலைக் கடமையாகும்.

- பிறகு அல்லாஹு அக்பர் எனக் கூறி சுஜூத் செய்யவேண்டும். ஏழு உறுப்புகள் மீது இந்த சுஜூத் அமையவேண்டும். (அவை : இரு கரங்கள், மூக்குடன் நெற்றி, இரு முட்டுக்கால்கள், இரு பாதங்கள்.) மேலும் இந்த சுஜூதில் சுப்ஹானரப்பியல் அஃலா எனக் கூறவேண்டும். இவ்வாறு மூன்று முறைகள் கூறுவது சிறந்ததாகும். சுப்ஹான ரப்பியல் அஃலா எனக் கூறுவது இரண்டாம் நிலைக் கடமையாகும்.

- பிறகு அல்லாஹு அக்பர் எனக் கூறிக்கொண்டு சுஜூதிலிருந்து எழுந்து அமரவேண்டும். இவ்வாறு எழுந்து அமர்வது முதல் நிலைக் கடமையாகும். இந்த அமர்வில் ரப்பிஃ ஃபிர்லீ எனக் கூறவேண்டும். இவ்வாறு கூறுவது இரண்டாம் நிலைக் கடமையாகும்.

- பிறகு அல்லாஹு அக்பர் எனக் கூறிக்கொண்டு இரண்டாவது சுஜூதை செய்யவேண்டும். முதலாவது சுஜூதில் செய்தவற்றை இந்த சுஜூதிலும் செய்ய வேண்டும்.

மேற்கூறப்பட்ட இக்காரியங்களை செய்து முடித்தால் அது முழுமையான ஒரு ரக்அத்தாகும்.

- இதற்கு பிறகு அல்லாஹு அக்பர் எனக் கூறியவராக தலையை உயர்த்தி இரண்டாவது

ரகஅத்திற்காக எழுந்து நிற்கவேண்டும். இவ்வாறு எழுவது முதல் நிலைக் கடமையாகும். பிறகு முதலாவது ரகஅத்தில் செய்தது போன்று செய்யவேண்டும்.

• சுப்ஹு த் தொழுகை, ஜு ம்ஆத் தொழுகை, பெருநாள் தொழுகை போன்ற இரண்டு ரகஅத்களைக் கொண்ட தொழுகையாக இருப்பின் இரண்டாவது ரக்அத்தின் இரண்டாவது சுஜூ திற்குப் பிறகு அமர்ந்து தஷஹ்ஹு த் ஓதவேண்டும். தஷஹ்ஹு த் என்பது:

التَحِيَّاتُ لِلَّهِ وَالصَّلَوَاتُ وَالطَّيِّبَاتُ ، السَلاَمُ عَلَيْكَ أيُّهَا النَّبِيُّ وَرَحْمَةُ اللهِ وَبَرَكَاتُهُ السَّلاَمُ عَلَيْنَا وَعَلَى عِبَادِ اللهِ الصَّالِحِيْنَ ، أشْهَدُ أن لاَ إلَهَ إلاَّ اللهُ وَأشْهَدُ أنَّ مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُوْلُهُ .

அத்தஹிய்யாது லில்லாஹ், வஸ்ஸலவாது வத்தய்யி பாது அஸ்ஸலாமு அலைக அய்யுஹன்னபிய்யு வரஹ்ம துல்லாஹி வபரகாதுஹு அஸ்ஸலாமு அலைனா வஅலா இபாதில்லாஹிஸ் ஸாலிஹீன் அஷ்ஹது அல்லாஇலாஹ இல்லல்லாஹ் வஅஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வரசூலுஹு .

என்று ஓதுவதாகும். பிறகு நபி (ஸல்) அவர்கள் மீது பின்வருமாறு ஸலவாத்து கூறவேண்டும்.

اللّهُمَّ صلِّ عَلَى مُحَمّدٍ وَعَلَى آلِ مُحَمَّدٍ كَمَا صَلّيْتَ عَلَى إبْرَاهِيْمَ وَعَلَى آلِ إبْرَاهِيْمَ إنَّكَ حَمِيْدٌ مَجِيْدٌ ، وَبَارِكْ عَلَى مُحَمّدٍ وَعَلَى آلِ مُحَمّدٍ كَمَا بَارَكْتَ عَلَى إبْرَاهِيْمَ وَعَلَى آلِ إبْرَاهِيْمَ إنَّكَ حَمِيْدٌ مَجِيْدٌ .

அல்லாஹு ம்ம ஸல்லி அலா முஹம்மதின் வஅலா ஆலி முஹம்மத் கமா ஸல்லைத அலா இப்றாஹீம் வஅலா ஆலி இப்றாஹீம் இன்னக ஹமீதும் மஜீத்.

வபாரிக் அலா முஹம்மதின் வஅலா ஆலி முஹம்மத் கமா பாரக்த அலா இப்றாஹீம வஅலா ஆலி இப்றாஹீம இன்னக ஹமீதும் மஜீத்

மேற்கூறப்பட்ட தஷஹ்ஹு தை தொழுகையின் இறுதியில் ஓதுவதும் அதற்கு பிறகு நபி (ஸல்) அவர்கள் மீது ஸலவாத்து கூறுவதும் தொழுகையின் முதல் நிலைக் கடமைகளில் உள்ளனவாகும்.

- பிறகு வலது, இடது புறங்களில் அஸ்ஸலாமு அலைக்கும் எனக்கூறி ஸலாம் கொடுக்கவேண்டும். இவ்வாறு இரு முறைகள் ஸலாம் கூறுவது முதல் நிலைக் கடமையாகும்.

- மூன்று ரகஅத்களுடைய மஃரிப் தொழுகையாகவோ அல்லது லுஹர், அஸர், இஷாத் தொழுகைகள் போன்று நான்கு ரகஅத்கள் கொண்டதாகவோ தொழுகை இருப்பின் இரண்டாவது ரகஅத்தின் இரண்டாவது சுஜூ திற்கு பிறகு அமர்ந்து மேற்கூறப்பட்ட தஷஹ்ஹு தை ஓதி (இங்கு தஷஹ்ஹு த் ஓதுவதும் அதற்காக அமர்வதும் இரண்டாம் நிலைக் கடமை ஆகும்.) பிறகு எழுந்து நிற்க வேண்டும். தொழுகை மூன்று ரகஅத்களைக் கொண்டதாக இருப்பின் ஒரு ரகஅத் மாத்திரம் தொழுது தஷஹ்ஹு தை ஓதவேண்டும், நான்கு ரகஅத்களைக் கொண்டதாக இருப்பின் இரண்டு ரகஅத்கள் தொழுது பிறகு தஷஹ்ஹு த் ஓதவேண்டும். அதன் பின்பு முன்னர் கூறியது போல் ஸலாம் கொடுக்க வேண்டும்.

- தொழுகையின் கடமைகளை, தொழும் முறையில் கூறப்பட்டது போல் ஒன்றன் பின் ஒன்றாக செய்வது

கடமையாகும்(அதாவது கடமைகளில் ஒன்றைவிட மற்றொன்றை முந்தி செய்யக் கூடாது).

• கடமைகள் அனைத்திலும் அமைதியைக் கடை பிடிப்பது தொழுகையின் முதல் நிலைக் கடமைகளில் ஒன்றாகும். அமைதி என்பது ஆறுதலாக அவசரமின்றி கடமைகளை நிறைவேற்றுவதைக் குறிக்கும்)

தொழும் முறையில் கூறப்பட்ட (ருகுன்கள் எனப்படும்) முதல் நிலைக் கடமையான காரியங்களை செய்யாது தொழுதால் தொழுகை நிறைவேறாது. ஆகவே எவரேனும் அக்கடமைகளை வேண்டுமென்றோ அல்லது மறதியாகவோ விட்டுவிட்டால் அவரின் தொழுகை முறிந்துவிடும்.

(வாஜிப்கள் எனப்படும்) இரண்டாம் நிலைக் கடமையான காரியங்களைப் பொறுத்தவரை அவற்றை வேண்டுமென்று விட்டவரின் தொழுகை முறிந்துவிடும், மறதியாக விட்டவர் தொழுகையின் இறுதியில் மறதிக்காக இரண்டு சுஜூதுகள் செய்து அதை (அக்குறையை) நிவர்த்தி செய்து கொள்ளவேண்டும்.

## தொழுகையை முறிக்கும் காரியங்கள்:

- தொழுகையின் (ருகுன் எனப்படும்) முதல் நிலைக் கடமைகளில் ஒன்றை விடுவது,
- அதன் (வாஜிப் எனப்படும்) இரண்டாம் நிலைக் கடமைகளில் ஒன்றை வேண்டுமென்று விடுவது.
- வேண்டுமென்று சாப்பிடுதல் அல்லது குடித்தல்.
- தொழுகைக்கு சம்பந்தமில்லாத வார்த்தைகளைப் பேசுதல்.

- காற்று வெளிப்படுதல் அல்லது வுழுவை முறிக்கும் காரியங்கள் ஏதும் இடம்பெறுதல்.
- அவசியமின்றி அதிக அசைவுகள் தொடர்ந்து இடம்பெறுதல்.
- கிப்லா திசையை விட்டும் முழுமையாக திரும்புதல்.
- தொழுகையில் இருக்கும்போது சிரித்தல்.
- ருகூஃ செய்தல் , சுஜூத் செய்தல், எழும்புதல், இருத்தல் ஆகிய செயல்களை வேண்டுமென்று அதிகமாகச் செய்தல்.
- இமாமுடன் சேர்ந்து தொழுபவர் அவரை முந்துதல்.

# தொழுகை அட்டவணை

| தொழுகையின் பெயர்கள் | ரகஅத்களின் எண்ணிக்கை | தொழுகைக்கான ஆரம்ப, இறுதி நேரங்கள் |
|---|---|---|
| பஜ்ர் | 2 | அதிகாலை தோன்றுவது முதல் சூரியன் உதயமாகும் வரை |
| லுஹர் | 4 | நடுவானிலிருந்து சூரியன் விலகியது முதல் ஒரு பொருளின் நிழல் அதன் அளவை அடையும் வரை |
| அஸர் | 4 | ஒரு பொருளின் நிழல் அதன் அளவை அடைந்தது முதல் அதுபோன்ற இரு மடங்கை அடையும்வரை |
| ம..ரிப் | 3 | சூரியன் மறைந்தது முதல் செவ்வானம் மறையும் வரை |
| இஷா | 4 | செவ்வானம் மறைந்தது முதல் இரவு நடுநிசிவரை. இக்கட்டான நிலையில் அதிகாலை வரை |

## தொழுகையுடன் சம்பந்தப்பட்ட இன்னும் சில விடயங்கள் :

**அ** ஜமாஅத்துடன் (கூட்டாக) தொழுகையை நிறைவேற்றுவது ஆண்களுக்கு மட்டுமே கடமை. பெண்களுக்கு கடமை இல்லை.

**ஆ-** தொழுகைக்காக பாங்கு, இகாமத் கூறுவதும் ஆண்களுக்கு மட்டுமே கடமை. பெண்களுக்கு கடமை இல்லை.

## அதான் (பாங்கு) கூறும் முறை :

அல்லாஹு அக்பர் அல்லாஹு அக்பர்
அல்லாஹு அக்பர் அல்லாஹு அக்பர்

அஷ்ஹது அல்லாஇலாஹ இல்லல்லாஹ்
அஷ்ஹது அல்லாஇலாஹ இல்லல்லாஹ்

அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹ்
அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹ்

ஹய்ய அலஸ்ஸலாஹ்
ஹய்ய அலஸ்ஸலாஹ்

ஹய்ய அலல் ஃபலாஹ்
ஹய்ய அலல் ஃபலாஹ்
அல்லாஹு அக்பர் அல்லாஹு அக்பர்
லாஇலாஹ இல்லல்லாஹ்

**குறிப்பு** : சுப்ஹு த் தொழுகைக்கான பாங்கில் ஹய்ய அலல் ஃபலாஹ் கூறி முடித்ததும் அல்லாஹு அக்பர் கூறுவதற்கு முன்பு அஸ்ஸலாது கைரும் மினன் னவ்ம் என்று இரு முறை கூறவேண்டும்.

ஒவ்வொரு தொழுகையையும், அதை நிறைவேற்ற ஆரம்பிக்கும்போது இகாமத் கூறுவது ஆண்கள்மீது கடமையாகும்.

## இகாமத் கூறும் முறை :

அல்லாஹு அக்பர் அல்லாஹு அக்பர்
அஷ்ஹது அல்லாஇலாஹ இல்லல்லாஹ்

அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹ்
ஹய்ய அலஸ்ஸலாஹ்
ஹய்ய அலல் ஃபலாஹ்
கத்காமதிஸ்ஸலாஹ் கத்காமதிஸ்ஸலாஹ்
அல்லாஹு அக்பர் அல்லாஹு அக்பர்
லாஇலாஹ இல்லல்லாஹ்

## ஜும்ஆ தொழுகை :

பருவ வயதை அடைந்த ஆண்கள்மீது ஜும்ஆத் தொழுகை கடமையாகும். அல்குர்ஆன் பின்வருமாறு கூறுகின்றது : ஈமான் கொண்டவர்களே! ஜும்ஆ உடைய நாளில் தொழுகைக்காக நீங்கள் அழைக்கப் பட்டால், அல்லாஹ்வைத் தியானிக்க (பள்ளிக்கு) விரைந்து செல்லுங்கள், வியாபாரத்தை விட்டு விடுங்கள். (62: 9)

ஜும்ஆத் தொழுகை இரண்டு ரகஅத்களாகும். வெள்ளிக்கிழமையில் லுஹர் தொழுகைக்கு பதிலாக பிரசங்கம் செய்பவர் (கதீப்) கூட்டாக அத்தொழு கையை நடாத்துவார்.

இத்தொழுகைக்காக குளிப்பது, சுத்தமான ஆடை அணிவது, மணம் பூசுவது, தொழுகையின் நேரம் வருமுன் பள்ளிவாயிலுக்கு செல்வது ஆகிய காரியங்கள் சுன்னத்தாகும். இமாம் பிரசங்கத்தை ஆரம்பித்துவிட்டால் பேசுவது கூடாது.
தொழுகைக்கான இரண்டாவது அதான் கூறப்பட்டு விட்டால் எந்த ஒரு பொருளையும் வாங்குவதோ, விற்பதோ தடை செய்யப்பட்டுள்ளது.

# இரு பெருநாள் தொழுகைகள் :

இது முக்கியத்துவம் வாய்ந்த சுன்னத்தான தொழுகையாகும். சில அறிஞர்கள் இத்தொழுகை ஆண்கள்மீது கடமை எனக் கூறியுள்ளனர். பெண் களும் இதில் கலந்துக் கொள்வது சிறந்ததாகும்.

இத்தொழுகைக்காக குளித்து, அழகிய ஆடை அணிந்து, நறுமணம் பூசிச் செல்வது சுன்னத்தாகும்.

மேலும் இரு பெருநாட்களின் இரவு நேரங்களில் தக்பீர் கூறுவதும் சுன்னத்தாகும். நோன்புப் பெருநாளில் தொழுகைக்காக இமாம் வெளிப்படும் வரை தக்பீருக்கான நேரம் தொடர்ந்திருக்கும். ஹஜ்ஜுப் பெருநாளில் பிறை 13 அன்று சூரியன் மறையும் வரை ஒவ்வொரு தொழுகைக்குப் பிறகும் தக்பீர் கூறுவது சுன்னத்தாகும்.

# தக்பீர் கூறும் முறை:

اَللهُ أكْبَرُ اللهُ أكْبَرُ لاإلهَ إلاَّ اللهُ واللهُ أكْبَرُ
اَللهُ أكْبَرُ وَلِلَّهِ الحَمْدُ

அல்லாஹு அக்பர், அல்லாஹு அக்பர், லாஇலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர், அல்லாஹு அக்பர் வலில்லாஹில் ஹம்து.

# ஜனாஸாவின் சட்டங்கள் :

மரணித்தவருக்காக சப்தமிட்டு அழுவது தடை செய்யப்பட்டுள்ளது. எவரது மரணத்திற்காக ஓலமிடப்படுகிறதோ அதன் மூலம் மறுமையில் அவர்

தண்டிக்கப்படுவார் என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். சாதாரண அழுகை குற்றத்திற்கு உரியதல்ல.

கணவன் மரணித்தால் மனைவி நான்கு மாதங்களும், பத்து தினங்களும் இத்தா இருக்கவேண்டும். ஏனைய எவருடைய மரணத்திற்காகவும் மூன்று தினங்களைவிட அதிகமாக கவலை கொள்ளக் கூடாது.

இத்தா என்பது : அவசியமின்றி (கணவன் மரணித்த) அப்பெண்மணி வீட்டைவிட்டு வெளியே செல்லாமல் இருப்பதும், ஆடை, சுருமா, மணம் போன்றவற்றால் தன்னை அலங்கரிக்காமல் இருப்பதுமாகும்.

பெண், கணவனுக்காக இத்தா இருக்கும் வேலையில் அவள் மறுமணம் செய்யக்கூடாது, மறுமணப் பேச்சுவார்த்தை நடாத்தவும் கூடாது, அதுபற்றி பிறர் அவளிடம் பேசவும் கூடாது.

## மரணித்தவரை குளிப்பாட்டுதல்.

மரணித்தவர் ஆணாக இருந்தாலும், பெண்ணாக இருந்தாலும், சிறுவராக இருந்தாலும், பெரியவராக இருந்தாலும் அவரை குளிப்பாட்டுவது கடமையாகும்.

## குளிப்பாட்டும் முறை :

1. முழு உடலும் நனையும் அளவு மரணித்தவரின் உடலில் தண்ணீரை ஊற்றவேண்டும்.
2. மரணித்தவருக்கு, தொழுகைக்கு வுழூ செய்வது போன்று வுழூ செய்து பிறகு மூன்று முறை குளிப்பாட்டுவது சுன்னத்தாகும்.

3. ஏதோ ஒரு காரணத்தினால் தண்ணீரால் அவரை குளிப்பாட்ட முடியாவிடின் தொழுகைக்கு தயம்மும் செய்வது போன்று மண்ணால் தயம்மும் செய்துவிட வேண்டும்.

4. மரணித்த ஆணை, ஆணே குளிப்பாட்ட வேண்டும். கணவனை மனைவி குளிப்பாட்ட முடியும். மரணித்த பெண்ணை, பெண்ணே குளிப்பாட்ட வேண்டும். மனைவியை கணவன் குளிப்பாட்டலாம்.

## க∴பனிடுதல் :

மரணித்தவரை க∴பனிடுவது கடமையாகும். க∴பனிடுதல் என்பது தலை, கால்கள் உட்பட உடல் முழுவதையும் ஆடையினால் அல்லது புடவை போன்ற வற்றால் மறைத்து சுற்றிவிடுவதாகும்.

க∴பன் ஆடை ஆண்களுக்கு மூன்று சுற்றுக்களாகவும், பெண்களுக்கு ஐந்து சுற்றுக்களாகவும் இருப்பது விரும்பத்தக்கதாகும்.

## ஜனாஸாத் தொழுகை :

மரணித்தவருக்காக தொழுகை நடாத்துவது கடமை ஆகும். முஸ்லிம்களில் சிலர் இதை நிறைவேற்றினால் போதுமானதாகும். கடமையான தொழுகைக்குரிய அனைத்து நிபந்தனைகளும் மரணித்தவருக்கான இத்தொழுகையிலும் நிபந்தனைகளாக அமையும்.

## ஜனாஸா தொழுகையை நிறைவேற்றும் முறை :

கிப்லா திசையில் ஜனாஸா வைக்கப்படவேண்டும். பின்பு இமாம் (தொழுகை நடாத்துபவர்) மரணித்தவர்

ஆணாக இருந்தால் தலைக்கு நேராகவும் பெண்ணாக இருந்தால் நடுவிலும் நிற்பார்.




அவருக்கு பின்னால் மக்கள், மூன்று வரிசைகளாகவோ அல்லது அதிகமாகவோ நிற்பர். (தொழுபவர் ஒருவராயின் தனியாக தொழுவார்) பின்பு நான்கு தக்பீர்கள் கூற வேண்டும்.

- முதல் தக்பீருக்கு பின்னால் சூரா ஃபாத்திஹாவை சப்தமின்றி மனதில் ஓதவேண்டும்.
- இரண்டாவது தக்பீருக்கு பின்னால் பெருமானார் (ஸல்) அவர்கள் மீது ஸலவாத்து கூறவேண்டும்.
- மூன்றாம் தக்பீருக்கு பின்னால் மரணித்தவருக்காக பிரார்த்தனை செய்யவேண்டும்.
- பின்பு நான்காவது தக்பீரை கூறி எதுவும் ஓதாமல் வலது புறத்தில் மாத்திரம் ஒரு முறை ஸலாம் கொடுக்க வேண்டும். விரும்பினால் இரு புறங்களும் ஸலாம் கொடுக்கலாம். பெருமானார் (ஸல்) அவர்கள் இரு விதத்திலும் செய்துள்ளார்கள்.

# அடக்கம் செய்தல்

மரணித்தவரை அடக்கம் செய்வது கடமையாகும். அதாவது அவரை (கப்ரு எனப்படும் குழியில் வைத்து) கிப்லா திசைக்கு திருப்பி, வலப்பக்கமாக படுக்கச்

செய்து, மண்ணால் உடல் முழுவதையும் மறைக்க வேண்டும்.

## அடக்கம் செய்யும்போது பின்வருவனவற்றை கவனத்தில் கொள்வது அவசியம்.

**1. கப்ரை பூமியுடன் சமப்படுத்தவேண்டும்.** ஏனெனில் கப்ருகளை பூமியுடன் சமப்படுத்துமாறு நபி (ஸல்) அவர்கள் கட்டளையிட்டுள்ளார்கள். எனினும் அது கப்ரு என அறியப்படவும், இழிவுக்குள்ளாகாது காக்கப்படவும் ஒரு ஜான் அளவு மாத்திரம் உயர்த்தப்படுவது சுன்னாவாகுமென அறிஞர்கள் கருதுகின்றனர். ஜாபிர் (ரழி) அவர்கள் அறிவிக்கும் ஹதீஸ் இதற்குச் சான்றாகும். அன்னார் கூறுகிறார்கள் : நபி (ஸல்) அவர்களின் கப்ரின்மீது ஒரு கல் நட்டப்பட்டது, மேலும் ஒரு ஜான் அளவு அன்னாரின் கப்ரு பூமியில் உயர்த்தப்பட்டிருந்தது. (பைஹகி)

சுஃப்யான் (ரழி) அவர்கள் அறிவிக்கும் ஹதீஸில் நபியவர்களின் கப்ரு குவியல் போன்று ஆக்கப்பட்டு இருந்ததை தான் கண்டதாக கூறுகிறார்கள். (புகாரி)

2. கப்ரின் மீது (சிமெண்ட், சுண்ணாம்பு போன்றவற்றால்) பூசுதல், கட்டுதல் ஹராமாகும். நபி (ஸல்) அவர்கள் அதை தடுத்துள்ளார்கள்.

3. கப்ருகள் மீது பள்ளிவாயில்கள் கட்டுவதும் ஹராமாகும்.

4. கப்ருகளை (அடக்கம் செய்த பின்பு) தோண்டுவது ஹராமாகும்.

5. கப்ருகள் மீது அமர்வதும் ஹராமாகும்.

# 3. நோன்பு

நோன்பு என்பது வணங்கும் எண்ணத்துடன் வைகறை முதல் சூரியன் மறையும்வரை உண்ணல், குடித்தல், (உடலுறவு கொள்ளல் அல்லது விந்தை வெளிப்படுத்துதல் போன்ற) இச்சைக்குரிய மற்றும் நோன்பை முறிக்கும் ஏனைய காரியங்கள் அனைத்திலிருந்தும் தவிர்ந்திருப்பதாகும். ஒவ்வொரு ஆண்டும் ரமழான் மாதத்தில் இவ்வாறு நோன்பு பிடிப்பது கடமையாகும். ஏனைய தினங்களில் இவ்வாறு நோற்றால் அது சுன்னத்தான நோன்பாகும்.

அல்லாஹு த்தஆலா கூறுகிறான் : ரமழான் மாதம் எத்தகையதென்றால் அதில்தான் மனிதர்களுக்கு (முழுமையான வழிகாட்டியாகவும், தெளிவான சான்றுகளைக் கொண்டதாகவும் (நன்மை தீமைகளைப்) பிரித்தறிவிப்பதுமான அல்குர்ஆன் இறக்கி அருளப்பெற்றது. ஆகவே, உங்களில் எவர் அம்மாதத்தை அடைகிறாரோ, அவர் அம்மாதத்தில் நோன்பு நோற்கவேண்டும். எனினும் எவர் நோயாளியாகவோ அல்லது பயணத்தில் இருக்கிறாரோ (அவர் அக்குறிப்பிட்ட நாட்களின் நோன்பை) ஏனைய மாதங்களில் நோற்க வேண்டும். அல்லாஹ் உங்களுக்கு இலகுவானதை நாடுகிறானே தவிர, உங்களுக்கு சிரமமானதை அவன் நாடவில்லை. எண்ணிக்கையை நீங்கள் முழுமையாக்குவதற்காகவும், உங்களுக்கு நேர்வழி காட்டியதற்காக நீங்கள் அல்லாஹ்வை பெருமைப்படுத்திடவும் (வேறு நாட்களில் நோற்கும் சலுகை வழங்கப்பட்டுள்ளது.) (2 : 185)

மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : இஸ்லாம் ஐந்து (காரியங்கள்) மீது நிறுவப்பட்டு உள்ளது அவை :
1. வணக்கத்திற்குரிய நாயன் அல்லாஹ்வைத் தவிர வேறு நாயன் இல்லை என்றும் முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் திருத்தூதராவார்கள் என்றும் சாட்சி கூறுதல். 2. தொழுகையை நிலை நாட்டுதல். 3. ஜகாத் வழங்குதல். 4. ரமழான் மாத நோன்பு நோற்றல். 5. ஹஜ் செய்தல் ஆகியனவாகும். (நூல் : புகாரி, முஸ்லிம்)

ஒரு முஸ்லிமின் மீது (ஆணாயினும் , பெண்ணாயினும்) நோன்பு கடமையாக்கப்பட பின்வரும் நிபந்தனைகள் அவசியமாகும். அவை : புத்தியுள்ளவராகவும், பருவவயதை அடைந்தவராகவும் அவர் இருக்க வேண்டும். பெண், மாதவிடாய், பிரசவத் தீட்டு ஆகியவற்றிலிருந்தும் சுத்தமாயிருத்தல் அவசியமாகும்.

## நோன்பை முறிக்கும் காரியங்கள் :

1. சாப்பிடுதல், குடித்தல், உடலுறவு கொள்ளல், விந்தை வெளிப்படுத்துதல், (நோன்பாளி தூங்கும் போது தானாகவே விந்து வெளியானால் அவரது நோன்பு முறியாது.) திரவமான ஒரு பொருள் அல்லது வேறு ஏதேனும் வயிற்றுக்குள் செல்லல் ஆகிய காரணங்களால் நோன்பு முறியும். மாதவிடாய் அல்லது பிரசவத்தின் காரணத்தால் பெண்ணுக்கு இரத்தம் வெளிப்பட்டாலும் நோன்பு முறியும்.

2. நோன்பை விடுவதாக ஒருவர் (மனதில் உறுதியாக) நினைத்தால் நோன்பை முறிக்கும் காரியங்கள் எதையும் அவர் செய்யாவிட்டாலும் அவரின் நோன்பு முறிந்துவிடும்.

3. நோன்பை முறிக்கும் காரியங்கள் எதையும் மறதியாக செய்துவிட்டவரின் நோன்பு முறியாது.

4. தொழுகையை சுருக்கித் தொழுமளவு தூரம் பிரயாணம் மேற்கொள்பவர் நோன்பை விடுவதும் ரமழான் மாதத் திற்குப் பிறகு வேறு தினத்தில் அதை நோற்பதும் ஆகுமானதாகும். அவ்வாறே நோன்பு பிடிக்க சக்தி இல்லாத அல்லது நோன்பு பிடித்தால் பாதிப்பு ஏற்படும் என்ற நிலையிலுள்ள நோயாளியும் நோன்பை விட்டு விட்டு ரமழான் மாதத்திற்குப் பிறகு வேறு தினத்தில் நோற்க வேண்டும். மேலும் கர்ப்பிணி, பாலூட்டும் பெண் ஆகியோரும் நோன்பு பிடிப்பது தன்னை பாதிக்கும் அல்லது குழந்தையை பாதிக்கும் எனப் பயந்தால் நோன்பை விட்டுவிட்டு ரமழான் மாதத்திற்கு பிறகு அதை நிறைவேற்ற வேண்டும் .

5 நோன்பு நோற்க முடியாத வயது முதிர்ந்த கிழவர், கிழவி ஆகியோர் நோன்பு பிடிப்பதற்கு பதிலாக நாளொன்றுக்கு ஒரு முத்து உணவை தானம் செய்யவேண்டும் (ஒரு முத்து என்பது ஏறக்குறைய 750 கிராமைக் குறிக்கும். )

# 4. ஜகாத்

இது இஸ்லாத்தின் மூன்றாவது கடமையாகவும், அல்குர்ஆனில் தொழுகையுடன் இணைத்து கூறப்படுகின்ற அம்சமாகவும் உள்ளது. ஜகாத் என்பது குறிப்பிட்ட பொருளில் குறித்த சாரார்களுக்காக குறித்த காலத்தில் நிறைவேற்றப்படுகின்ற கடமை ஆகும்.

இக்கடமையில் பல தத்துவங்கள் உள்ளன. அல்லாஹு த்தஆலா பின்வருமாறு கூறுகின்றான்:(நபியே!)

அவர்களுடைய செல்வத்திலிருந்து தர்மத்திற்கானதை எடுத்துக் கொண்டு, அதனால் அவர்களை உள்ளும் புறமும் தூய்மையாக்குவீராக! (9 : 103)

மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : இஸ்லாம் ஐந்து காரியங்கள்மீது நிறுவப்பட்டுள்ளது அவை : வணக்கத்திற்குரியவன் அல்லாஹ் மாத்திரம் என்றும், முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என்றும் சாட்சி கூறுவதாகும். மேலும் தொழுகை யை நிலை நாட்டுவதும், ஜகாத் வழங்குவதும், ரமழான் மாதத்தில் நோன்பு நோற்பதும், (மக்கா) ஆலயத்தை ஹஜ் செய்வதுமாகும் எனக் கூறினார்கள்.

(நூல் : புகாரி, முஸ்லிம்)

ஜகாத் என்பது ஒருவர் தானே விரும்பி கொடுக்கும் கொடையல்ல. மாறாக அது ஒரு கடமையாகவும், பணத்தால் செய்யப்படும் வணக்கமாகவும் உள்ளது. ஏழைகளின் தேவைகளை நிறைவு செய்யவும், அவர்களின் கஷ்டத்தைப் போக்கவும் அல்லாஹ் அதனை கடமையாக ஆக்கியுள்ளான். ஜகாத் பாவங்களுக்கு பரிகாரமாகவும், சோதனையை தடுக்கக்கூடியதாகவும், அமைதியைப் பரப்பும் பலமான வழியாகவும் உள்ளது.

## ஜகாத் கடமையாகும் பொருட்கள் நான்கு வகைப்படும். அவை :

- பூமியில் விளையக்கூடிய தானியங்கள், (சேமித்து காக்கப்படும்) கனிகள், உலோகங்கள் ஆகியன. (சேமித்து காக்க முடியாத) பழங்களிலும் காய்கறி களிலும் ஜகாத் கிடையாது.

- கால்நடைகளில் ஆடு, மாடு, ஒட்டகம் ஆகியன.

- தங்கம், வெள்ளி. இவை தவிர்ந்த ஏனைய பெருமதிமிக்க ஆபரணங்களில் ஜகாத் இல்லை

- வியாபாரச் சரக்குகள். (வியாபாரம் செய்யவென சேமிக்கப்பட்ட அனைத்து பொருட்களுக்கும் ஜகாத் உண்டு) பாவனைக்காக ஏற்பாடு செய்யப்பட்ட விரிப்பு, நாற்காலி, மேசைகள், பொருட்களை களஞ்சியப் படுத்தும் இடம், மற்றும் வாகனம் போன்ற பொருட்களில் ஜகாத் இல்லை.

- மேற்கூறப்பட்ட பொருட்களில் மார்க்கம் வரையறுத்த அளவை (நிசாபை) அவை அடையும்வரை ஜகாத் கடமையாகாது. ஒவ்வொரு பொருளுக்கும் வித்தியாசமான மார்க்க வரையறை உண்டு.

## பின்வரும் அட்டவணையை கவனிக்கவும்.

## முதலாவது :

### பூமியின் விளைச்சல்

| பொருட்கள் | இருக்கவேண்டிய அளவு | கொடுக்கவேண்டிய அளவு |
|---|---|---|
| தானியம், கனிவகை | 5அவ்சுக் அல்லது அதைவிட அதிகம் இருத்தல். 5 அவ்சுக் என்பது ஏறத்தாழ 900 கிலோவுக்கு சமமான அளவாகும். | ஆறு, மழை போன்ற இயற்கை நீரினால் செலவின்றி நீர் பாய்ச் சப்பட்டால் 10க்கு ஒன்று வீதமும். செலவு செய்து கருவிகளினால் நீர்ப் பாய்ச்சப்பட்டால் 20க்கு ஒன்று வீதமும் வழங்க வேண்டும் |
| உலோகப் பொருட்கள் | 85கிராமிற்கு சமமான அல்லது அதைவிட அதிகமாயிருத்தல் | 100 க்கு 2.5 வீதம் கொடுக்க வேண்டும். |

## இரண்டாவது :

### கால்நடைகள் ( ஒட்டகம், மாடு, ஆடு )

| பொருட்கள் | இருக்கவேண்டிய அளவு | கொடுக்கவேண்டிய அளவு |
|---|---|---|
| ஒட்டகம் | 5 முதல் 9 வரை | ஓர் ஆடு |
| | 10 முதல் 14 வரை | இரண்டு ஆடுகள் |
| | 15 முதல் 19 வரை | மூன்று ஆடுகள் |
| | 20 முதல் 24 வரை | நான்கு ஆடுகள் |
| மாடு | 30 முதல் 39 வரை | ஒரு வயது பசு ஒன்று |
| | 40 முதல் 59 வரை | இரு வயது பசு ஒன்று |
| | 60 முதல் 69 வரை | ஒரு வயது காளை இரண்டு |
| | 70 முதல் 79 வரை | ஒரு வயது காளை ஒன்றும் இரு வயது பசு ஒன்றும் |

| | | |
|---|---|---|
| ஆடு | 40 முதல் 120 வரை | ஓர் ஆடு |
| | 121 முதல் 200 வரை | இரு ஆடுகள் |
| | 201 முதல் 399 வரை | மூன்று ஆடுகள் |

## மூன்றாவது :
## தங்கம், வெள்ளி, நாணயம்.

| பொருட்கள் | இருக்கவேண்டிய அளவு | கொடுக்கவேண்டிய அளவு |
|---|---|---|
| தங்கம் | 85 அல்லது அதைவிட அதிக கிராம் | 100 க்கு 2.5 வீதம். |
| வெள்ளி | 595 கிராம் | 100 க்கு 2.5 வீதம். |
| நாணயம் | 85 கிராம் தங்கம் அல்லது 595 கிராம் வெள்ளிக்கு சமமான தொகை இருத்தல் | 100 க்கு 2.5 வீதம். |

## நான்காவது :
## வியாபாரப் பொருட்கள்.

| பொருட்கள் | இருக்கவேண்டிய அளவு | கொடுக்கவேண்டிய அளவு |
|---|---|---|
| வியாபாரப் பொருட்கள் | தங்கம் வெள்ளியில் கடமையாகும் அளவு இருத்தல். | 100 க்கு 2.5 வீதம் |

தானியங்கள், கனிகள் தவிர்ந்த மேற்கூறப்பட்ட அனைத்து பொருட்களுக்கும் ஒரு வருட காலம் பூர்த்தியான பின்னரே ஜகாத் கடமையாகும்.

1. தானியங்கள், கனிகளை பொருத்தவரை அவை அறுவடை செய்யும்போது வழங்கப்பட வேண்டும்.

2. வியாபாரப் பொருட்களுக்கான இலாபம், ஜகாத் வழங்கும்போது மூலப்பணத்துடன் சேர்க்கப்படும். இலாபப் பணம் ஒரு வருடம் பூர்த்தி அடையாவிட்டாலும் சரியே.

3. ஆடு, மாடு, ஒட்டகம் ஆகியவற்றுக்கு ஜகாத் வழங்கும்போது, அவற்றின் குட்டிகளும் கணக்கில் சேர்க்கப்பட வேண்டும். ஒரு வருடத்தை அவை அடையாவிட்டாலும் சரியே.

# ஜகாத் பெறத் தகுதிவாய்ந்தோர்.

எட்டு கூட்டத்தினர்களுக்கு மட்டுமே ஜகாத் கொடுக்க வேண்டும். அவர்கள் பின்வருமாறு :

1. யாசிப்போர்.
2. ஏழைகள்.
3. ஜகாத்தை வசூல் செய்து வினியோகம் செய்யவதிலும், அனாதை பிள்ளைகளுக்காக அதை பராமரிப்பதிலும் ஈடுபட்டுள்ள ஊழியர்கள்.
4. உள்ளங்கள் ஈர்க்கப்படவேண்டியோர். (மார்க்கத்தில் பலவீன நிலையிலுள்ள முஸ்லிமின் உள்ளம் ஈர்க்கப்படு வதற்காக அவருக்கு ஜகாத் வழங்கப்படும். மேலும் காஃபிரான மனிதனுக்கு இஸ்லாத்தில் விருப்பம் உண்டாக்கும் முகமாக அல்லது அவன் தீமையை தடுக்கும் முகமாக ஜகாத் வழங்கலாம்)
5. அடிமைகளை விடுதலை செய்வதற்கு. (முஸ்லிமான அடிமையை உரிமையிட ஜகாத் பணம் கொடுத்து வாங்கலாம்)
6. கடன் பட்டிருப்பவர்களுக்கு, (பெற்ற கடனை திருப்பி கொடுக்க வசதியற்றவருக்கு கடனை அடைப்பதற்காக ஜகாத் வழங்கலாம்.)

7. அல்லாஹ்வின் பாதையில், (போர் புரிபவர், போருக்காக வீரர்களை தயாரித்தல், மற்றும் ஆயுதம் இன்ன பிற போர்த் தேவைகள் ஆகியவற்றுக்கும் ஜகாத் வழங்கப்படும்.)

8. வழிப்போக்கர்கள். (இடையில் ஏற்பட்ட இடரின் காரணமாக ஊர் போய்சேர முடியாத பயணி, அவர் ஊரில் பணக்காரராக இருப்பினும் அவருக்கு ஜகாத் பணம் கொடுக்கப்படும்.)

# ஜகாத் அல்பித்ர்

ஜகாத் அல்பித்ர் என்பது நோன்புப் பெருநாள் இரவில் அல்லது பகலில் பெருநாள் தொழுகைக்கு முன்பு வழங்கப்படும் ஜகாத் ஆகும். அதன் அளவு (தலைக்கு) ஒரு ஸாஉ உணவாகும். ஸாஉ என்பது ஏறத்தாழ மூன்று கிலோ அளவைக் கொண்டது.

நோன்பாளியை தூய்மைப் படுத்துவதற்காகவும் ஏழைகளுக்கு உணவாக இருக்கும் பொருட்டும் இது கடமையாக்கப்பட்டுள்ளது. இது ஊரிலுள்ள ஏழை களுக்கும், தேவையுள்ளோருக்கும் வழங்கப்படும்.

# அறுத்தல்

இது மிருகத்தை அதன் மூச்சுக் குழாய், பிடரி நரம்பு ஆகியவற்றை அறுப்பதை குறிக்கும். இவ்வேளையில் பிஸ்மில்லாஹ் எனக் கூறி அல்லாஹ்வின் திருநாமத்தை நினைவுபடுத்தி அறுக்கவேண்டும். சாப்பிட அனுமதிக்கப்பட்ட பிராணியை மேலே கூறப்பட்ட பிரகாரம் அறுக்காது அதன் எப்பகுதியையும் சாப்பிடுவது கூடாது. அல்லாஹு த்தஆலா கூறுகிறான்: அல்லாஹ்வின் பெயர் கூறப்படாததை உண்ணாதீர்கள். அது குற்றம் (6:121) அல்லாஹ்வின் நாமம் கூறப்பட்டு, இரத்தம் ஓட்டப்பட்டதை

(பிராணியை) சாப்பிடுங்கள் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். மீன், வெட்டுக்கிளி ஆகியவற்றை அறுத்து சாப்பிடவேண்டுமென நிபந்தனை கிடையாது. (அறுக்காமலே சாப்பிடலாம்)

## 5. ஹஜ்

இது இஸ்லாத்தின் அடிப்படைக் கடமைகளில் ஒன்றாகும். இக்கடமையை நிறைவேற்றச் சென்றுவர சக்தியுள்ள, பருவ வயதை அடைந்த, புத்தியுள்ள முஸ்லிமான ஆண், பெண் அனைவர்மீதும் வாழ்வில் ஒருமுறை கடமையாகும். அல்லாஹு த்தஆலா கூறுகிறான் : அந்த ஆலயத்தில் அல்லாஹ்வுக்காக ஹஜ் செய்வது, சென்றுவர சக்தி பெற்ற மனிதர்களுக்குக் கடமையாகும் (3:97). நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : இஸ்லாம் ஐந்து (காரியங்கள்) மீது நிறுவப்பட்டுள்ளது அவை: வணக்கத்திற்குரியவன் அல்லாஹ் மாத்திரம் என்றும், முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என்றும் சாட்சி கூறுவதாகும். மேலும் தொழுகையை நிலைநாட்டுவதும், ஜகாத் வழங்குவதும், ரமழான் மாதத்தில் நோன்பு நோற்பதும், (மக்கா) ஆலயத்தை ஹஜ் செய்வதுமாகும் எனக் கூறினார்கள். (நூல் : புகாரி, முஸ்லிம்)

**ஹஜ் வணக்கத்திற்கு (ருகுன்கள் எனப் படும்) நான்கு முதல் நிலைக் கடமைகள் உள்ளன. அவை :**

1. இஹ்ராம்,
2. தவா:ப்,
3. ஸஈ,
4. அர:பாவில் தங்குதல்.

இக்கடமைகளில் ஒன்றை ஹஜ் செய்பவர் நிறைவேற்றாது விட்டுவிட்டால், அவரின் ஹஜ் வணக்கம் வீணாகிவிடும்.

**இஹ்ராம்** : இதன் கருத்து, மீகாத் எனும் எல்லையைக் கடந்து செல்லும்போது வணக்கத்தில் நுழைவதை நாடியவனாக லப்பைக ஹஜ்ஜன் எனக் கூறுவதாகும்.

இவ்விடத்தில் தைக்கப்பட்ட ஆடையை களைந்து தைக்கப்படாத இரு துணிகளை ஆண் அணிந்துக் கொள்வார். பெண் அவள் அணிந்திருக்கும் ஆடையுடன் இஹ்ராம் செய்வாள்.

**தவாஃப் :** இது ஹஜ்ஜின் தவாஃபை நிறைவேற்றும் எண்ணத்துடன் கஃபா ஆலயத்தை ஏழு முறை சுற்றி வலம் வருவதாகும். இது துல்ஹஜ் மாதத்தின் பத்தாம் தினத்தில் அல்லது அய்யாமுத்தஷ்ரீகின் நாட்களான 11, 12, 13 ஆம் தினங்களில் செய்யப்படும். தவாஃப் செய்பவர் பெருந்தொடக்கு, சிறுதொடக்கு ஆகியவற்றிலிருந்து சுத்தமாகவும், மறைக்க வேண்டிய பகுதியை மறைத்தும் இருக்க வேண்டும். மேலும் தவாஃபின் சுற்றுக்களை இடைவிடாது தொடராக இறுதிவரை செய்யவேண்டும். ஹஜருல் அஸ்வத் கல்லுக்கு நேராகவும், கஃபா இடது புறத்தில் அமைந்தவாறும் தவாஃபை ஆரம்பம் செய்யவேண்டும்.

**ஸஈ :** இது ஹஜ்ஜுக்குரிய ஸஈ செய்கிறேன் எனும் நிய்யத்துடன் ஸஃபா, மர்வா (எனும் மலைகளுக்கு) இடையில் ஏழு தடவைகள் சென்றுவருவதாகும். ஸஃபாவில் ஆரம்பித்து மர்வாவில் முடிக்கவேண்டும். ஸஃபாவிலிருந்து மர்வாவிற்குச் செல்வது ஒரு

தடவையாகவும் மர்வாவிலிருந்து ஸஃபாவிற்கு வருவது இன்னொரு தடவையாகவும் கணிக்கவேண்டும் .

**அரஃபாவில் தங்குதல் :** இதன் நோக்கம் அரஃபாத் எனப்படும் இடத்தில், அங்கு தங்கும் எண்ணத்துடன் ஆஜராவதாகும். துல்ஹஜ் மாதம் ஒன்பதாம் திகதி லுஹர் நேரத்தின் பின் ஆரம்பமாகி பத்தாம் நாள் பொழுது விடியும்வரை இங்கு தங்கும் நேரமாகும். சிறிதளவு நேரம் தங்குவது போதுமானது என்றாலும் ஒன்பதாம் தினத்தில் சூரியன் உச்சியைவிட்டு சாய்ந்ததில் இருந்து அன்று மாலையில் சூரியன் அஸ்தமிக்கும்வரை (அங்கு) தங்கிவிட்டு செல்வதே முறையான சுன்னத் ஆகும் .

## உம்ரா

இது எந்நேரத்திலும் செய்யலாம். எல்லையிலிருந்து (ஆடைகளை களைந்து இஹ்ராம் ஆடையை அணிந்துக்கொண்டு உம்ராச் செய்யப் போவதை) நிய்யத் செய்யவேண்டும். பிறகு கஃபா ஆலயத்தில் தவாஃப் செய்து பிறகு ஸஃபா, மர்வாக்கிடையில் ஸஈ செய்யவேண்டும். அதன்பிறகு தலைமுடியை சிரைப்பதன் மூலமோ அல்லது குறைப்பதன் மூலமோ உம்ராவின் காரியங்கள் நிறைவு பெறும்.

# ஹஜ் செய்யும் முறை

ஹஜ் கடமையை நிறைவேற்றும் முறை மூன்று விதங்களில் உள்ளது. 1. தமத்துஃ : இதுபற்றிய விபரம் இந்நூலில் விவரிக்கப்பட உள்ளது. 2 கிரான் : இம்முறையில் தவாஃப், ஸஈ ஆகிய வணக்கங்கள் ஒரு முறையே செய்யப்படும். மேலும் ஹஜ் செய்பவர்

பெருநாள் தினத்தன்று கல்லெறிந்து தலைமுடி சிரைக்கும்வரை இஹ்ராம் ஆடையை களையாது இருப்பார், (குர்பானி கொடுப்பது இவர்மீது கடமையாகும்). 3. இஃப்ராத் : இம்முறையிலும் தவாஃப், ஸஈ ஆகிய வணக்கங்கள் ஒரு முறையே செய்யப்படும். மேலும் ஹஜ் செய்பவர் பெருநாள் தினத்தன்று கல்லெறிந்து தலைமுடி சிரைக்கும்வரை இஹ்ராம் ஆடையை களையாது இருப்பார். ஆயினும் இவர் மீது குர்பானி கடமையில்லை.

# ஹஜ் தமத்துஃ

1. ஹஜ்ஜு க்குரிய மாதங்களான ஷவ்வால், துல்கஃதா, துல்ஹஜ் ஆகிய மாதங்களில் மீகாத் எனும் எல்லையில் வைத்து நிய்யத் செய்து கொண்டு அல்லாஹு ம்ம லப்பைக உம்ரதன் முதமத்திஅன் பிஹா இலல் ஹஜ் என்று கூறவேண்டும்.

2. பின்பு கஃபா ஆலயத்திற்கு சென்று ஏழு முறை அதைச்சுற்றி (வலம்) வரவேண்டும்.

3. பின்பு ஸஈ செய்யும் இடத்திற்கு சென்று ஸஃபா மர்வாவுக்கிடையில் ஏழு முறை சென்று வரவேண்டும்.

4. பின்பு தலைமுடியை குறைத்து உம்ரா கடமையை முடித்து கொண்டு தனது (சாதாரண) ஆடைகளை அணிந்து கொள்ளவேண்டும். மேற்கூறிய இக்காரியங்களை செய்து முடிப்பதன் மூலம் உம்ரா வணக்கம் நிறை வேறிவிடும். ஆகவே உம்ராவுக்காக நிய்யத் செய்தவுடன் தடையான அனைத்து காரியங்களையும் செய்வது இப்போது அவருக்கு ஆகுமானதாகும்.

5. துல்ஹஜ் மாதத்தின் எட்டாம் தினத்தில் லப்பைகல் லாஹு ம்ம ஹஜ்ஜன் எனக் கூறியவராக ஹஜ்ஜு க்காக

நிய்யத் செய்யவேண்டும். மேலும் ஒன்பதாவது தினத்தில் அரஃபா சென்று அங்கு தங்க வேண்டும்.

6. ஒன்பதாவது தினத்தில் சூரியன் அஸ்தமித்ததும் முஸ்தலிஃபா செல்லவேண்டும்.

7. முஸ்தலிஃபாவில் அதிகாலைவரை தங்கி பிறகு மினா செல்லவேண்டும்.

8. மினாவை வந்தடைந்தால் ஜம்ரதுல் அகபா சென்று கல்லெறியவேண்டும்.

9. பிறகு தலைமுடியை சிரைக்கவேண்டும். பெண் தலைமுடியில் சிறிதளவு குறைப்பாள். பிறகு தன் இஹ்ராம் ஆடையை களையவேண்டும்.

10. பிறகு தனது குர்பானி பிராணியை அறுக்கவேண்டும். இக்காரியத்தை பதிமூன்றாம் தினம் மாலைவரை பிற்படுத்தலாம்.

11. பிறகு ஹஜ்ஜு க்கான தவாஃப், ஸஈ ஆகியவற்றை நிறைவேற்றவேண்டும்.

12. பிறகு 11, 12, 13 ஆகிய அய்யாமுத் தஷ்ரீக் எனும் தினங்களில் மினாவில் இரவை கழிக்கவேண்டும்.

13. மதிய நேரத்தின் பின்பு ஒவ்வொரு நாளும் மூன்று ஜம்ராக்களிலும் கல் எறியவேண்டும்.

14. மக்காவை விட்டுச் செல்வதற்கு முன்பு கஃபாவை தவாஃப் செய்யவேண்டும். இது விடைபெறும் தவாஃபாகும்.

## ஹஜ்ஜின் (வாஜிப் எனப்படும்) இரண்டாம் நிலைக் கடமைகள் :

1. எல்லையில் வைத்து நிய்யத் செய்யவேண்டும். எவர் எல்லையைக் கடந்த பிறகு நிய்யத் செய்கிறாரோ அவர் கடமையொன்றை விட்டவராவார்.

2. (9ஆம் தினத்தின்) பகலில் அர∴பாவில் தங்க ஆரம்பித்தவர், அன்று மாலை சூரியன் மறையும்வரை தங்கவேண்டும். எவர் இரவில் அங்கு வருகை தந்தாரோ அவர் சிறிதளவு நேரம் தங்கினாலும் போதுமானதாகும்.

3. துல்ஹஜ் பத்தாம் தின இரவில் அர∴பாவிலிருந்து வெளியானதும் முஸ்தலி∴பாவில் தங்கவேண்டும்.

4. துல்ஹஜ் பத்தாம் நாளில் ஜம்ரதுல் அகபாவிலும், 11,12,13 ஆகிய அய்யாமுத் தஷ்ரீக் எனும் தினங்களில் மதிய நேரத்திற்கு பின்பு மூன்று ஜம்ராக்களிலும் கல்லெறியவேண்டும்.

5. பத்தாம் தினம் ஜம்ரதுல் அகபாவில் கல்லெறிந்த பிறகு தலைமுடியை சிரைக்கவேண்டும் அல்லது குறைக்கவேண்டும்.

6. 11,12,13 ஆம் நாட்களின் இரவுகளில் மினாவில் தங்கவேண்டும். விரைவாக செல்ல விரும்புபவர் 11,12 ஆகிய இரவுகளில் மாத்திரம் தங்கிவிட்டு செல்லலாம்.

7. விடைபெறும் தவா∴ப் : அதாவது ஹஜ் செய்பவர் மக்காவை பிரிந்து செல்லுமுன் க∴பா ஆலயத்தை ஏழு தடவைகள் சுற்றி தவா∴ப் செய்வதாகும்.

மேற்கூறப்பட்ட இந்த கடமைகளில் ஒன்றை செய்யாது விட்டவர் தமு (அதாவது ஒரு ஆட்டை அறுத்து) கொடுப்பது கடமையாகும். அதை அவர் மக்காவிலுள்ள ஹரம் பிரதேசத்தில் அறுத்து, அங்கிருக்கும் ஏழைகளுக்கு வினியோகிக்கவேண்டும்.

## நிய்யத் (இஹ்ராம்) செய்தபிறகு தடை செய்யப்பட்ட காரியங்கள்.

ஹஜ் அல்லது உம்ராவிற்காக நிய்யத் செய்தவர்மீது ஒன்பது காரியங்கள் தடை செய்யப்பட்டுள்ளன. ஆகவே அவைகளை செய்வது கூடாது. அவை பின்வருமாறு :

1. உடலில் அணியும் வகையில் தைக்கப்பட்ட ஆடைகளை அணிதல். (இது ஆண்களுக்கு மாத்திரமே. பெண், அவள் விரும்பும் ஆடைகளை அணிந்து கொள்ளலாம். )
2. தலையை மூடுதல். (இதுவும் ஆண்களுக்கு மாத்திரமே )
3. மணம் பூசுதல்.
4. தலை, உடல் முடிகளிலிருந்து எதையேனும் களைதல்.
5. நகம் வெட்டுதல்.
6. முத்தமிடுதல் போன்ற உடலுறவின் முன்காரியங்களில் எதையேனும் செய்தல்.
7. வேட்டையாடுதல்.
8. திருமண பேச்சுவார்த்தை அல்லது உடன்படிக்கை செய்தல்.
9. உடலுறவு கொள்ளல்.

குறிப்பு : பெண் முகமூடி, கையுறை ஆகியன அணிதல் கூடாது.

# மூன்றாவது :

## வியாபாரக் கொடுக்கல் வாங்கலில் தடை செய்யப்பட்ட சில அம்சங்கள்.

- **வியாபாரச் சரக்கை வாங்குவதற்குமுன் விற்றல்,** அதாவது ஒரு பொருளை வாங்கிய முஸ்லிம் அதை தனக்கு விற்பவரிடமிருந்து பெற்றுக் கொள்ளும்வரை அதை அவர் விற்பனை செய்வது கூடாது.

- ஒரு பொருளை தனது முஸ்லிம் சகோதரர் வாங்கிய பின்பு, அப்பொருளை வாங்கியவரிடம் திருப்பிக் கொடுத்துவிடு. நான் அதைவிட குறைந்த விலைக்கு உனக்கு விற்கிறேன் என்றோ, அல்லது பொருளை விற்றவரிடம் உடன்படிக்கையை முறித்துவிடு. நான் அதிக பணம் கொடுத்து உன்னிடம் அதை வாங்குகிறேன் என்றோ ஒரு முஸ்லிம் கூறுவது கூடாது.

- ஒரு முஸ்லிம் தடைசெய்யப்பட்ட (ஹறாமான) இன்னும் அசுத்தமான ஒரு பொருளை விற்பதோ, கூலிக்கு வழங்குவதோ கூடாது. அவ்வாறே தடைசெய்யப்பட்ட ஒரு காரியத்திற்கு துணையான அல்லது அதை செய்யத் தூண்டக்கூடியதான பொருளையும் விற்பதோ, கூலிக்கு வழங்குவதோ கூடாது. ஆகவே மதுபானம், பன்றியின் இறைச்சி, மது தயாரிப்பவனுக்கு திராட்சைப் பழம் விற்பது போன்ற வியாபாரங்களை செய்வது தடை செய்யப்பட்டுள்ளது.

- தனது சகோதரனை ஏமாற்றக்கூடிய மோசடி வியாபாரம் எதுவும் செய்யக்கூடாது. ஆகவே நீரிலுள்ள மீன், ஆகாயத்தில் பறக்கும் பறவை, மிருகத்தின் வயிற்றிலுள்ள சிசு, மேலும் அதன் மடியிலுள்ள பால் ஆகியவற்றை விற்பனை செய்வது கூடாது.

• தன்னிடம் இல்லாத ஒரு பொருளையோ அல்லது தன் கைவசம் சொந்தமாக்கிக் கொள்ளாத ஒரு பொருளையோ விற்பனை செய்வது முஸ்லிமுக்கு ஆகாது. ஏனெனில் இத்தகைய வியாபாரத்தில் பல சிக்கல்கள் இடம்பெற சாத்தியமுள்ளது.

• கடனை கடனுக்கு விற்பனை செய்வது கூடாது. அதாவது ஒரு ஆட்டுக்குட்டியை உம்மிடம் கடனுக்கு பெற்ற மனிதன் கடனை திருப்பிச் செலுத்தும் நேரம் வந்தவுடன் அக்கடனை கொடுக்க முடியாமல் மீண்டும் அதற்கு ஒரு விலை கூறி தவணை கோருவதாகும். உதாரணமாக (ஏற்கனவே 300 ரியாலைவிட குறைந்த கடனுக்கு பெற்ற ஒரு பொருளை இப்போது அதன் விலையை கூட்டி)300 ரியாலுக்கு அதை எனக்கு தவணைக்கு விற்பாயாக என கேட்பது போன்றதாகும் .

• ஒரு பொருளை ஒருவருக்கு கடனாகக் கொடுத்த முஸ்லிம், பிறகு அதே பொருளை அவரிடமிருந்து குறைந்த விலைக்கு ரொக்கத்திற்கு வாங்குவது கூடாது.

• அனைத்து விதமான ஏமாற்று முறைகளும் வியாபாரத்தில் தடையாகும்.

• வட்டி தடை செய்யப்பட்டுள்ளது. பண வைப்புக்காக வங்கி வழங்கும் மேலதிக பணமும் வட்டிதான். மேலும் இத்தகைய வழிகளில் பொருளீட்டல் செய்வதும் இன்னும் அதில் பங்கு கொள்வதும்கூட தடையாகும்.

• விளைவு என்னவென்று புரியாத விதத்தில் அமைந்துள்ள வியாபாரக் காப்புறுதி முறை தடை செய்யப்பட்டதாகும். வாகனங்கள்மீதும், வியாபார

இடங்கள்மீதும், வாழ்க்கைமீதும் செய்யப்படுகின்ற காப்புறுதி இதற்கு உதாரணமாகும்.

- இரண்டாம் முறையாக ஜு ம்ஆவிற்கு அழைப்பு (பாங்கு) விடுக்கப்பட்டதன் பின்பு முஸ்லிமானவர் ஒரு பொருளை வாங்குவதோ, விற்பதோ கூடாது.

- நாணயமாற்றம் செய்யும்போது இரு தரப்பினரும் ஒரே இடத்தில், அதே நேரத்தில் நாணயங்களை மாற்றிக்கொள்ள வேண்டும். மாற்றும் முன்பு இருவரில் ஒருவர் பிரிந்துசென்றால் நாணயமாற்று உடன்படிக்கை முறிந்துபோகும்.

# திருமணம்.

திருமணத்திற்கு அவசியமான செலவுகளைச் செய்ய இயலுமானவர் தடைசெய்யப்பட்ட (விபச்சார) வழியில் வீழ்ந்திடும் அச்சம் கொள்வாராயின் அவர் திருமணம் செய்வது கடமையாகும். இந்நிலையில் இல்லாதவர் திருமணம் செய்வது சுன்னத்தாகும் என இஸ்லாம் கூறுகிறது. திருமணம் இறைதூதர்களின் வழிமுறைகளில் ஒன்று என்பது குறிப்பிடத்தக்கது.

திருமணம் அங்கீகாரம் பெற நான்கு கடமைகள் பூர்த்தியாவது அவசியமாகும்.

1. பொறுப்பாளர் : பெண்ணின் தந்தை, அல்லது பராமரிப்பாளர், அல்லது நெருங்கிய உறவினர்.

2. இரு சாட்சிகள் : திருமண ஒப்பந்த வேளையில் சமூகமளித்து அதற்கு சாட்சி அளிக்கும் நேர்மையான முஸ்லிம்களில் இரு ஆண்கள் அல்லது பலர் இருக்கவேண்டும்.

3. திருமண ஒப்பந்தம் : மக்களுக்கு தெரிந்த சொற்களால் தனது விருப்பத்தையும், சம்மதத்தையும் அறிவிக்கக்கூடிய வார்த்தைகளால் பெண்ணின் பொறுப்பாளரும், மணமகனும் செய்கின்ற திருமண உடன்படிக்கை.
அதாவது பெண்ணின் பொறுப்பாளர் எனது பொறுப்பிலுள்ள பெண்ணை உமக்கு மணமுடித்து வைக்கின்றேன் எனக் கூற, மணவாளர் அதை நான் ஏற்றுக்கொள்கிறேன் எனக் கூறுவதாகும்.
4. மஹர் : மஹர் என்பது திருமணத்தின்போது மணமகள் மணமகனிடமிருந்து பெறும் நன்கொடைப் பொருளாகும். பெண்களுக்கு அவர்களுடைய மஹர்களை (திருமணக் கொடைகளை) மகிழ்வோடு கொடுத்து விடுங்கள் என அல்லாஹு த்தஆலா கூறுகிறான். (4: 4) இந்த மஹர் மணப்பெண்ணுக்கு சொந்தமானது. வேறு எவருக்கும் சொந்தமாகாது.

- பெண் விரும்பாத ஒருவரை திருமணம் செய்யுமாறு நிர்ப்பந்திக்கக்கூடாது. திருமணம் செய்வதில் அவளது அனுமதியை அவசியம் பெறவேண்டும்.

- ஒரு சகோதரர் திருமணம் பேசி இருக்கும் இடத்தில் அவர் அப்பேச்சுவார்த்தையை விட்டுவிட்டார் எனத்தெரிந் தால் வேறொருவர் அங்கு திருமணம் பேசலாம், இல்லாவிட்டால் பேசக்கூடாது.

- திருமண ஒப்பந்தம் நடைபெறும்வரை திருமணம் செய்யப்போகும் இருவரும் தனித்து பேசுவதோ, வெளியில் செல்வதோ கூடாது.

- கணவன் மரணித்தோ அல்லது விவாகரத்து செய்யப்பட்டோ இத்தாவில் இருக்கும் பெண்ணை

அவளின் இத்தா முடிவடையும்வரை திருமணம் பேசக்கூடாது.

## இத்தாவின் கால எல்லை:

கணவன் மரணித்த பெண்ணின் இத்தா காலம் 4 மாதங்களும், 10 தினங்களுமாகும். விவாகரத்து செய்யப்பட்ட பெண் மூன்று மாதவிடாய் காலங்களும், மாதவிடாய் ஏற்படாதவள் 3 மாதங்களும் இத்தா இருக்கவேண்டும்.

- ஒரு முஸ்லிம் நான்கு பெண்களைவிட அதிகமானோரை (ஒரே காலகட்டத்தில்) திருமணம் செய்யக்கூடாது.
- மனைவி மற்றும் சிறு பிள்ளைகளுக்கு செலவு செய்வது ஆணின் கடமையாகும்.
- முஸ்லிமான பெண்ணை முஸ்லிம் அல்லாதவர் எந்நிலையிலும் திருமணம் செய்யக்கூடாது.
- அன்னியப் பெண்களில் வேதக்கார(யூத, கிறிஸ்தவ) பெண்களை மட்டும முஸ்லிமானவர் திருமணம் செய்யலாம். ஆயினும் முஸ்லிமான பெண்ணை மண முடிப்பதே சிறந்தது.

## விவாகரத்து ( தலாக் )

மனைவியுடன் தொடர்ந்து வாழ்க்கை நடாத்த முடியாது எனக் கருதும் கணவன், அவளிடம் உன்னை நான் விவாகரத்து செய்கின்றேன் எனக் கூறி, விவாகரத்து செய்து பிரிய முடியும். மூன்று முறைகள் மனைவியை விவாகரத்து செய்யும் உரிமை கணவனுக்கு உண்டு. ஒரு முறை விவாகரத்து செய்து, பிறகு அவளை சேர்த்துக் கொண்டவர் பிறகு இரண்டாம்

முறையும் பின்பு மூன்றாம் முறையும் விவாகரத்து செய்யும் உரிமையை பெற்றுள்ளார். எனவே எவர் மூன்றாம் முறையும் விவாகரத்து செய்துவிட்டாரோ அவர், அப்பெண்ணுடன் மீண்டும் சேரமுடியாது. ஆயினும் அப்பெண் வேறு ஒருவரை திருமணம் செய்து, அவர் அப்பெண்ணுடன் வாழ்ந்து, பிறகு அவரும் விவாகரத்து செய்து பிரிந்தால், முதல் கணவன் அவளை மீண்டும் மணமுடிக்க விரும்பினால் மணந்து கொள்ளலாம்.

கணவனுடன் வாழ்க்கை நடாத்துவது முடியாது எனக்கருதும் பெண், அக்கணவரிடம் விவாகரத்து செய்யுமாறு கோரலாம்.

## திருமணம் செய்ய தடையான பெண்கள் :

### 1. குடும்ப உறவினால் தடைசெய்யப்பட்டோர்.

- தாய்
- சகோதரி
- மகள்
- சகோதரியின் மகள்
- சகோதரனின் மகள்
- மாமி (தந்தையின் சகோதரி)
- சின்னம்மா (தாயின் சகோதரி)

### 2. பால்குடியால் தடைசெய்யப்பட்டோர்.

- பாலூட்டிய தாய்
- பால்குடிச் சகோதரி
- பால்குடிச் சகோதரியின் மகள்
- பால்குடி மகள்.

- பால்குடிச் சகோதரரின் மகள்
- பால்குடி தந்தையின் சகோதரி
- பாலூட்டிய தாயின் சகோதரி

## 3. திருமண உறவினால் தடையானோர்.

- உறவு கொண்ட மனைவியின் மகள். மேலும் அப்பெண்ணின் மகள், மகன் ஆகியோரின் பெண் பிள்ளைகள்
- தந்தையின் மனைவி
- மகனின் மனைவி, பேரனின் மனைவி
- மனைவியின் தாய், பாட்டி ஆகியோர்.

✲ ஒரு பெண்ணையும், அவளின் சகோதரியையும் அல்லது அவளின் தாய்தந்தையின் சகோதரிகளையும் ஒரே காலத்தில் மனைவிகளாக வைத்திருப்பது தடைசெய்யப்பட்டுள்ளது.

✲ வேறொருவரின் மனைவியை அவர் விவாகரத்து செய்தோ அல்லது மரணத்தின் மூலமோ பிரியாதவரை அப்பெண்ணை மணப்பது தடையாகும்.

# உணவுப் பொருட்கள் :

மார்க்கத்தில் உண்ணக்கூடாது அல்லது குடிக்க கூடாது என தடை செய்யப்பட்டவைகளைத் தவிர ஏனைய அனைத்து உணவுப் பொருட்களும், பானங்களும் ஆகுமானவை என்பதே சட்டமாகும்.

தடுக்கப்பட்ட சில உணவுப் பொருட்கள் பின்வருமாறு :

1 . போதைப் பொருட்கள்
2 . அசுத்தங்கள்
3 . பன்றி இறைச்சி சாப்பிடுதல்

4 . கழுதை, கோவேறு கழுதை
5 . வேட்டைப் பற்கள் உடைய விலங்குகள்
வேட்டைக்குரிய கூரிய நகங்கள் உடைய பறவைகள்
6 . இறந்தவை

# நான்காவது :

## இஸ்லாம் மார்க்கத்தில் தடையான இன்னும் சில அம்சங்கள் :

1 . விபச்சாரம்,
2 . ஓரினச் சேர்க்கை
3 . நியாயமின்றி பிறர்மீது அத்துமீறல் அல்லது எவருக்கேனும் தீங்கிழைக்க காரணமாயிருத்தல்.
4 . கொலை செய்வதற்கு தடைசெய்யப்பட்ட ஒரு உயிரைக் கொல்லுதல் ( தற்கொலையும் இதில் அடங்கும்)
5 . பெண்கள் அழகை வெளிப்படுத்தி திரிதல், (முகத்தை வெளிப்படுத்துவது அதிக அழகை வெளிக்காட்டுவதாகும். )
6 . ஒழுக்கமுள்ள பெண்கள்மீது பழி சுமத்துதல்.
7 . பெற்றோரை துன்புறுத்துதல்.
8 . வட்டி (வாங்குதல், கொடுத்தல்).
9 . தங்கம், பட்டு ஆகியவற்றை ஆண்கள் அணிதல்.
10 . தங்கம், வெள்ளிப் பாத்திரங்களில் சாப்பிடுதல், குடித்தல்.
11 . சூதாட்டம்
12 . சதி செய்தல்.
13 . பொய் கூறுதல்.
14 . களவு, லஞ்சம்.
15 . குடும்ப உறவை முறித்து வாழ்தல்.

# دليل المسلم

إعداد

الشيخ عبد الكريم الديوان

ترجمه إلى التاميلية

رمزان فارس محمد نزار

(المترجم بمكتب الجاليات بحي الروضة بالرياض)

راجعه

حبيب عليار - المترجم بمكتب النسيم بالرياض

عبدالرحيم آدم - المترجم بمكتب غرب الديرة بالرياض

## இந்நூலில் உள்ளவை

விசுவாசக் கொள்கை
வணக்கங்கள்
1. சுத்தம் 2. தொழுகை 3. நோன்பு
4. ஸகாத் 5. ஹஜ்
கொடுக்கல் வாங்கலில் தடை செய்யப்பட்டவை
திருமணம், விவாகரத்து
மணமுடிக்க தடையான பெண்கள்
உணவுப் பொருட்கள்
இஸ்லாத்தில் தடையான வேறு சில அம்சங்கள்

## محتوي الكتاب

أولاً : العقيدة – شرح أركان الإيمان
ثانياً : العبادات – الطهارة – الصلاة – الصيام – الزكاة – الحج
ثالثاً : المعاملات – المعاملات المحرمة – النكاح – الطلاق – المطعومات
رابعاً : بعض المحرمات في الشريعة الإسلامية

للمساهمة في طباعة الكتاب
شركة الراجحي - ٢٠٤٠١١٩٠٩٢

المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات بحي الروضة بالرياض
تحت إشراف وزارة الشئون الإسلامية والأوقاف والدعوة والإرشاد
هاتف ٢٤٩٢٧٢٧ فاكس ٢٤٠١١٧٥ البريد الإلكتروني rawdhah@hotmail.com ص.ب ٨٧٢٩٩ الرياض ١١٦٤٢
ردمك: ٠-٢-٩٥٣٩-٩٩٦٠